*Karuṇāniti, Kalaiñar Mu.*

*I̱namuḻakkum*

*Ceṉṉai, 1953*

Record no. 2889

Bibliographic Record Target

*கருணாநிதி, கலைஞர் மு., 1924-*
*இனமுழக்கம். -- 2. பதிப்பு. -- சென்னை : முன்னேற்றப் பண்ணை, 1953.*
*99 p. ; 18 cm.*
*Record no. 2889*

*Karuṇāniti, Kalaiñar Mu., 1924-*
*I͟namuḻakkam. -- 2. patippu. -- Ce͟n͟n͟ai : Mu͟n͟n͟ēṟṟap Paṇṇai, 1953.*
*99 p. ; 18 cm.*
*Record no. 2889*

S. Siwapatham.

# இனமுழக்கம்



கலைஞர்

## மு.கருணாநிதி

விற்பனை உரிமை:-



கலை மன்றம்
சென்னை.1

இரண்டாம் பதிப்பு: ஜனவரி 1953


விலை ரூ. 1—0—0
அட்டை பைண்ட் ரூ. 1—8—0

வெளியீடு:-
முன்னேற்றப் பண்ணை
சென்னை

# முதலில்......!

இனமுழக்கம் என்ற நூலின் முதற் பதிப்பு சிறு நூலாக வெளியாகித் தீர்ந்து விட்டது!

இப்போது இரண்டாம் பதிப்பாக நல்ல முறையில் வெளியிட்டிருக்கிறேன்.

இத்துடன், ஏற்கனவே மூன்று பதிப்புகள் வந்து முடிந்துபோன, கோவையில் கருணாநிதி, என்ற நூலையும் இணைத்து ஒரே புத்தகமாக்கி யிருக்கிறேன்.

தோழர் கருணாநிதிக்கு என் நன்றி!

மு. நமசிவாயம்.

# புலியுள்ளம்! நரியுள்ளம்!!

புலி! காட்டிலே நடமாடிடும் விலங்கு!

புலியைக் கண்டதும், ஏன் புலியின் மிடுக்கான குரலைக் கேட்டதுமே கிலி கொண்டு அஞ்சியோடிடும், பிற விலங்குகள், பொதுவாக!

புலியின் குணம், இயற்கைக் குணமே பிற மிருகங்களைக் கொன்று தின்பது தான்.

இதனால், புலிக்கு நேராக நின்று போரிட்டுத் தம்மைப் பாதுகாத்துக் கொள்ள முடியாத விலங்குகள் அனைத்தும் புலியின் குரலைக் கேட்டதுமே, அல்லது புலியின் உருவைக் கண்டதுமே கிலி கொண்டு ஓடிட வேண்டியது, மிகவும் அவசியமாகிறது!

புலியுள்ளம் படைத்த மாந்தர், சிலரின் மிக மிகச் சிலரின் போக்கு-மனிதரிடையேயும், கிலியை, பயத்தை, உண்டாக்கிடத்தான் செய்கிறது!

பிற மிருகங்களைக் கொல்கிறோமே, கோரப் பற்களால் கிழித்தெறிகிறோமே, கூரான நகங்களால் கொத்திப் புண்ணுக்குகிறோமே என எண்ணிப் பார்த்திடாது, பார்த்திடவும் முடியாது, புலியினால்!



புலியுள்ளம்! காட்டிலே வாழ்ந்திடும் விலங்கின் உள்ளம்; இயற்கையின் படைப்பிற்கேற்றபடி இருக்கின்ற உள்ளம், புலியின் உள்ளம்!

ஐந்தறிவு படைத்த மிருகத்தின் கோர, கொடிய உள்ளம் படைத்தவராக,ஆறறிவு படைத்த மனிதரிலும் சிலர் இருக்கத்தான் இருக்கிறார்கள்.

கொடுமை! கோரம்! பிறரின் துன்பம் — துயர் — துடி துடித்திடும் துன்பப் பெருக்கு! இவை யெல்லாம், பொழுது போக்காகப் புலப்படும்,புலியுள்ளம் படைத்த மாந்தர்க்கு!

புலியுள்ளம் படைத்தோரின் போக்கை, மனிதப் பண்பினின்றும் மாறி, மிருகப் பண்புடையோராகவே விளங்கிடும் மனித மிருகங்களை, மனிதரிடையே பார்க்கத் தானே பார்க்கிறோம்!

மனித மிருகங்கள்! புலியுள்ளம் படைத்தோர் — புலி யினத்தவர் — பிற மிருகங்களைக் கொன்று — பிற விலங்கினங்களின் வாழ்வை யழித் தொழித்து வாழ்ந்திடும் புலியினத்தவர்—மனிதரில் இருந்திடும் காரணத்தால் தான் மனிதரிடையே, மண்ணாசையும், பொன்னாசையும், பெண்ணாசையும் பெருகி, பெருமளவில் பெருகிப் பெருகி, மனித வாழ்வில் மிருகங்கள் புகுந்து வேட்டையாடிக் கடித்துக் கொத்திச் சீரழித்து விட்டுக் காட்டுக்கு ஓடி யொளிந்து கொள்வது போல, மனிதர்கள்—மனிதர்களையே, பிற மனிதரது உழைப்பையும், வாழ்வையுமே வேட்டையாடு கின்றனர் — வெறித் தாண்டவமு மாடுகின்றனர்!

மண்—பெண்—பொன்—என்ற ஆசைகள் மனிதனுக்கு வேண்டாதவையல்ல!

வேண்டியவை தான்! ஆனால், மனிதன் தனது ஆசைகளைத் தனது அறிவின் துணை கொண்டு, ஆராய்ச்சித் திறனைப் பயன் படுத்தி, பகுத்தறிவால் பண்படுத்திக் கட்டுப்பாடான-கண்ணிய வாழ்வு-களங்க மற்ற, காட்டு மிராண்டித்தனமு மற்ற நல்ல வாழ்வு—நாகரிக வாழ்வு வாழ வேண்டும்!

மனிதனுக்கும், மிருகத்திற்கும், மனிதப் பண்பிற்கும், மிருகப் பண்பிற்கும், காட்டிற்கும் நாட்டிற்கும் கட்டுப் பாடற்ற காட்டு வாழ்விற்கும்-கட்டுப் பாடான நாட்டு வாழ்விற்கும் நல்லதொரு மாறுதல்—நன்மையும் நலமுந்தந்திடும் மாறுதல், இருக்கும்—இருக்க முடியும்!

ஆனால் புலியுள்ளம் படைத்த சிலரது போக்கினால், பலரின் உள்ளங்கள், உணர்ச்சிகள், வாழ்வுப் பாதைகள் மட்டுமல்ல, சிலபல நேரங்களில் பண்பட்ட இனங்களே கூடப் பாழாக்கப்பட்டுச் சீரழிந்து சின்னபின்னமாகின்றன!

புலியுள்ளம் படைத்தோருடன், நரியுள்ளம் படைத்த நயவஞ்சகரின் கூட்டுறவு நாட்டையும், நாட்டு மக்களையுமே மீளாத் துன்பத்தில் சுழன்று உழன்றிடச் செய்கிறது.

நரியுள்ளம்! நயவஞ்சகமும், நிலைமைக் கேற்றபடி நெளிந்து, வளைந்து, குனிந்து, குழைந்து கொடுத்துச்



சமயம் பார்த்து நெஞ்சை யிறுக்கி, மூச்சடக்கித் திணறச் செய்திடும் சதியுள்ளம்—சந்தர்ப்பவாதம்.

நரியுள்ளம்! புலியுள்ளம்! இவை யிரண்டும் நாட்டிலே, மனித உருவிலே செய்திடும் கோலாகாலங்கள் கோரக் காட்சிகளாய்ப் பிறர் வாழ்வில், வேதனையை யுண்டாக்குகின்றன!

புலியுள்ளம் படைத்தோர் புரிந்திடும் செயல்களாவது வெளிப்படையாகத் தெரியும், தெரிந்து கொள்ளவும் முடியும்.

ஆனால் நரியுள்ளம் படைத்தவரைப் புரிந்து கொள்வதும் கடினம், அதைவிட அவரது செயல்களையும், சிந்தனைகளையும் சீர்தூக்கிப் பார்த்திடுவதும் மிக மிகக் கடினம். சிங்காரச் சிலந்திக் கூடுதான்!

நரியுள்ளம், தந்திரமாகப் புலியுள்ளத்தைக் குத்திக் கிளறித் தூண்டிவிட்டு, புலி, வேட்டையாடி விலங்கை வீழ்த்தியதும் புலியையும் கிலிகொள்ளச் செய்து ஓடிவிடும்படிச் செய்து, புலி வீழ்த்திய விலங்கைத் தானே புசித்திடும் என்று கூறுவர்.

இதே நிலையில், மனிதர்கள்—தனி மனிதர்கள் மட்டுமல்ல, மனிதரில் கலை, நாகரிகம், மொழி, நடை, உடை, பாவனை, வாழும் இடம் முதலிய பற்பல வற்றால் பிரிந்துள்ளவர்கள்—வேறு வேறு இனத்தவர், சிக்கிச் சீரழிகின்றனர்.

புலியுள்ளம்—நரியுள்ளம படைத்த மனிதரின், மனித இனத்தவரின், பிடியிலிருந்து விடுபட விரும்புவது மனித மனம் படைத்தோரின் வேட்கையாவதில் வியப்பொன்றுமில்லை யல்லவா?

இத்தகைய வேட்கையின், விழிப்புணர்ச்சியின் எழுச்சியின் விளைவால் எழுந்த வேட்கையின் விளைவே, விடுதலைக் குரலே, முழக்கமே இனமுழக்கம், திராவிட இனமுழக்கம்.

இன முழக்கம், இழிவையும், இடரையும் போக்கிடத் துடித்திடும் தூய இனத்தின் முழக்கம்!

வட நாட்டுப் பொருளாதார அரசியல் பிடியிலிருந்து-புலியுள்ளத்திலிருந்தும், ஆரியம் என்ற நரியுள்ளத்தின் நாகரிக, ஆனால் நயவஞ்சக வலையினின்றும், திராவிட நாட்டைமீட்டிடும் முழக்கமே இன முழக்கம்! திராவிட இனமுழக்கம்.

இன முழக்கம், இனிது முழங்கட்டும்! வாழ்க திராவிடம்! வெல்க இன முழக்கம்!

வணக்கம்,
**மு. நமசிவாயம்**
பண்ணையாளர்.



# இன முழக்கம்

கோவலனையே என் நெஞ்சாரக் காதலித்தேன். கணிகையர் குலத்தில்தான் பிறந்தேன். ஆனால் வேசியாக வாழ விரும்பவில்லை. விஷங்கலவாத நீரோடை என் காதல். என் காதலைப் பாலைவனமாக்கி, என் கருத்தில் நுழைந்த கட்டழகரைப் பாண்டியன் பலியிட்டான். அவர் மேல் எனக்கிருந்த அன்பு என்னைத் துறவியாக்கிற்று.

ஆனால் தமிழ்ப் பெண்ணைக் கேளுங்கள்! "காதலிற் சிறந்தவளுக்கு ஒரு உதாரணம் கொடு" என்று!

என்னை வேசி, விபசாரி என்று வசைமாரி பொழிந்து நாடகம் நடத்துவார்கள்...........சிலப்பதிகாரம் தெரியாதவர்கள், சிந்தனை யற்றவர்கள்....!

காதலுக்கு உதாரணம் இந்திரனைக் கூடிய கௌதமரிஷியின் மனைவி அகல்யாவும், சந்திரனைக் காமுற்ற பிரகஸ்பதி முனிவரின் பத்தினி தாரையும் என்று......கதை கூறுவார்கள்.......

காதலுக்காக வாழ்வையே தியாகம் செய்தஎன்னைச் சொல்ல மாட்டார்கள்!

காரணம் என்ன?

மாதவி.

என் காதலன் மதுரைக் காவலனால் கொல்லப் பட்டார் என்று கேட்டு......மன்னனை நீதி கேட்டு, அம் மணிமுடியோன் தன்தவறை யுணர்ந்து மாளச் செய்து, மதுரை நகரையே சாம்பலாக்கப் புறப்பட்டேன்.

என் மணாளனோடு இறப்புலகில் இன்பங் காண எண்ணினேன். நான் மட்டுமா.........பூதப் பாண்டியன் தேவி, தன் கணவன் இறந்ததும் தானும் தீயில் இறங்கினாள். தீ அவளுக்குத் தாமரைப் பொய்கையாய் இருந்ததாம்!

ஆனால் தமிழச்சியைக் கேளுங்கள், "கற்புக்குப்பேர் போனவள் யாரம்மா? என்று!"

எங்களைச் சொல்ல மாட்டாள்—ஐவரை மணந்து ஆறாவது புருடனையும் மனதில் எண்ணிய திரௌபதியை அழியாத பத்தினி என்பாள்.

காரணம் என்ன?

கண்ணகி.

* • •

என் சகோதரன் செங்குட்டுவன்தான் சேர நாட்டு மகுடத்துக்கு உரியவன். ஒரு நாள் கொலு மண்டபத்தில் ஒரு ஆருடக்காரன் நுழைந்தான். அவன் அண்ணனுக்கு முடி கிடைக்காது: தம்பிக்குத்தான் அந்த அதிர்ஷ்டம் என்று புளுகினான்.

செங்குட்டுவன் முகத்திலே மாறுதல் படர்வதை நான் கண்டேன், "எனக்கு ஆட்சியா? இல்லை....இல்லை





...இந்த ஜோஸ்யத்தைப் பொய்யாக்குகிறேன்" எனச் சபதம் ஒலித்து உடனே துறவறம் பூண்டேன்.

அண்ணனையே அரியணையில் அமர்த்தி அகமகிழ்ந்தேன். இது நான் சகோதரனுக்காகச் செய்த தியாகம்.

ஆனால் தமிழனைக் கேளுங்கள், "சகோதர வாஞ்சையுள்ள ஒருவன் பெயரைச் சொல்ல முடியுமா?" என்று! உடனே பதில் வரும், 'இராமன் தம்பி பரதன்' என்று!

என் பெயரும் நான் தந்த சிலப்பதிகாரமும் தமிழனுக்குச் சரியாகத் தெரியாது.

காரணம் என்ன?

இளங்கோவடிகள்.

* * *

"என் நண்பன் கோப்பெருஞ் சோழ மன்னனை நான் நேரில் பார்த்தது கூட இல்லை. ஆனால் அறிவின் சிறப்பு எங்களைத் தோழர்களாக்கிற்று! மன்னன் இறந்தான் என்ற செய்தி என் செவியைத் தொடுவதற்குள் நான் மாண்டு விட்டேன்.

ஆனால் தமிழனைக் கேளுங்கள்; நட்புக்கு யாரப்பா நல்ல உதாரணம்? என்று!

என்னைச் சொல்ல மாட்டான்—இராமாயணத்துக் குகன், விபீஷணன் சுக்ரீவன் ஆகியவர்கள்தான் அவன் நினைவுக்கு வருவார்கள்.

காரணம் என்ன?

புலவர் பிசிராந்தையார்.

பட்டினத்தாரும், தாயுமானவரும், பதினெட்டுச் சித்தரும், நானும் எவ்வளவோ பாடிப் பார்த்தோம் இந்தப் பாழ் பட்ட நாட்டைப் பண்படுத்த!

நாங்கள் பட்ட தொல்லைகள் கொஞ்ச நஞ்சமல்ல. என்னை ஒரு அறையிலே தள்ளிக் கொன்று......அருட் பெருஞ்சோதியிலே ஐக்யமாகி விட்டதாக அறியாத மக்களிடம் அறிவித்து விட்டனர் வைதிகர். இவ்வளவு அல்லலுற்றேமே......

ஆனால் தமிழனைக் கேட்டுப் பாருங்கள்; 'உன் நாட்டில் சமரச கீதம் பாடியவர்கள் யாரப்பா?' என்று! நாங்கள் அவன் நெஞ்சில் இடம் பெற மாட்டோம்.

ஆனால் சாதாரண சாயிபாபா அவன் நெஞ்சில் மட்டுமல்ல...பொத்தானக, மோதிரமாக அவன் உடலிலும் இடம் பெறுவார்.

காரணம் என்ன?

வடலூர் இராமலிங்கனார்.

* * *

"கர்வத்தால் கனத்துப்போன கனக விசயர் தலைகளில் கல்லேற்றி, இமயத்தில் தமிழ்க் கொடி பொறித்து, இந் நாட்டுப் புகழ் பெருக்கி வந்தேன். தமிழர் வீரத்தைத் தரணிக்கு எடுத்துக் காட்டினேன்.

ஆனால் தமிழனைக் கேளுங்கள்; "வீரத்திற்குச் சான்று யார்?" என்று!





என்னை மறந்து விடுவான். மறைந்திருந்து வாலியைக் கொன்ற மகா விஷ்ணுவின் அவதாரம் இராம பிரான் என்று வர்ணிப்பான்.

காரணம் என்ன?

சேரன் செங்குட்டுவன்

* * *

உலகு செழிக்க—வாழ்வு உயர — அல்லல் மாள— அவதி நீங்க — அரும் பாடு பட்டு ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங் குறட்பாக்களை அளித்தேனே...

ஆனால் தமிழனிடம், "வாழ்வு ஓங்க வழி வகுத்தவன் யார்?" என்று வினவுங்கள்.

பகவத்கீதையைத் தான், கண்ணன் காட்டிய வழி என்று உங்களிடம் காட்டுவான்.

காரணம் என்ன?

திருவள்ளுவர்.

* * *

ஒரு நாள்...மாலை நேரம்...தேரில் சென்று கொண்டிருந்தேன்......சிரித்த முல்லைக் கொடி தழுவிப் படரக் கொம்பில்லாமல் தவித்தது. என் தேரை நிறுத்தி அதன் தூணில் அதைப் படரவிட்டு...கால் நடையாக அரண்மனை திரும்பினேன்.

புலவர்களுக் கெல்லாம் பொன்னும்மணியும் அள்ளி அள்ளிக் கொடுத்தேன்.

ஆனால் தமிழனைப் பார்த்து, "தம்பீ! கொடை வள்ளல் ஒருவன் பெயரைக் குறிப்பிடு" என்று கேட்டுப் பாருங்கள்; என் பண்பே அவனுக்குத் தெரியாது......

"கொடைக்குக் கர்ண மகாராஜா" என்பான்.

காரணம் என்ன?

பாரிவள்ளல்

* * *

காரணம் என்ன?...அத்தனை பேருங் கேட்கிறார்கள், காரணம் என்ன? என்று!...

காமராஜ நாடார் தனக்குத் தெரியாது என்கிறார். சிவஞான கிராமணியார் தெரிந்தும், காரணம் சொல்ல மறுக்கிறார். சிக்கலான நிலை அவர்கட்கு.

இதோ! காரணம் சொல்கிறான் சுயமரியாதைக்காரன்....

'வள்ளுவரே! வடலூர் இராமலிங்கரே! வாளுக்கஞ்சா வீர செங்குட்டுவரே! வள்ளல் பாரியே! மாதவியே! கண்ணகியே!...நீங்கள் போற்றப் படவில்லை, காரணம்: நீங்கள் திராவிட இனம். அவர்கள் ஆரிய இனம்."

"திராவிடன் திராவிடனைப் போற்றாத அளவுக்கு மான மிழந்து விட்டானா? இப்படித் திருவள்ளுவர் கேட்கிறார்? சோகமாக!





"இந்நிலை மாறாதா?" எனக் கண்ணீர் விடுகிறாள் கண்ணகி.

"மாறும்...அதற்குத்தான் நாட்டில் இன முழக்கம் நடைபெறுகிறது", என்று ஆறுதல் வார்த்தை பேசுகிறான் உறுதியொளி வீசும் கண்களோடு சுயமரியாதைக்காரன்!

* * *

# சொர்க்க லோகத்தில்...!

சொர்க்க லோகம், சூரியன் மறையும் நேரம். சுந்தரமான பூஞ்சோலை. சோலையின் ஒரு மூலையில் சொந்த விஷயங்கள் பேசிக் கொண்டிருந்தனர், சில தேவர்கள்.

சுற்றிச் சுற்றிப் பூப்பறித்து சுழல் வண்டுகளென ஆடிவந்த அரம்பையர்கள், அவர்கள் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளும் ஒய்யாரம்; ரம்பையின் நவரத்ன மாலையைப் பார்த்து மேனகை, இது ஏதடி என்று கேட்க......இது இந்திரன் தந்தது என......'ஓஹோ கட்டிலறைப் பரிசா' என்று மற்றவர்கள் கேலி செய்ய... அப்படியே ஒவ்வொருவரும் தங்கள் அணிகளை.....இது சந்திரன் சன்மானம், இது சூரியன் பரிசு, இது மன்மதனின் வெகுமானம் என அறிமுகப்படுத்திக் கொண்டிருந்தனர்.

சந்திரனும் தாரையும் அஸ்வதி நட்சத்திரத்தை எடுத்து பூப்பந்து ஆடிக் கொண்டிருந்தார்கள், ஒரு பகுதியில்!

பூலோகத்தையே உருட்டி அக்னி பகவான் வாயு முதலியவர்கள் கால்பந்து விளையாட்டில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள்.





பார்வதிதேவி பரமசிவன் தோளிலே கிடந்த பாம்பை யெடுத்து (ஸ்கிப்பிங் ரோப்) குதிக்கயிறு ஆடிக் கொண்டிருந்தாள்.

பிரம்மாவும் சரஸ்வதியும் புதிதாக வெளியான ஒரு நாவலைப் படிக்கும் சுவாரஸ்யத்தில் இருந்தனர்.

மகாவிஷ்ணு, லட்சுமியோடு கண்ணு மூச்சி யாடுவதாகப் பொய் சொல்லி அவள் கண்ணைக் கட்டி அலைய விட்டுவிட்டு......ஊர்வசியும் அவரும் ஒரு அருவியின் பக்கம் போய் உல்லாசத்தில் ஈடுபட்டிருந்தனர்.

மயிலுக்கும் சேவலுக்கும் சண்டை மூட்டிவிட்டு, வள்ளி தெய்வயானை சமேதராய் முருகன் மகிழ்ச்சியில் திளைத்திருந்தார்.

விநாயகர் துதிக்கையால் நீரையுறிஞ்சி அதைத் தேவ மாதர்கள் மேலிறைத்து வேடிக்கை செய்து கொண்டிருந்தார்.

யாரும் தன்னைக் கவனிக்கவில்லை யென்றறிந்த பரமசிவன் தாருகாவனத்து ரிஷி பத்தினிகளின் " ஜாகை "க்குப் போய்க் கொண்டிருந்தார்.

சொர்க்க லோகத்தில் இந்தச் சோலை விருந்து!

இவைகள் எதையுமே கவனிக்காமல் புல் தரையில் ஒரு கூட்டம் அமர்ந்திருந்தது. அந்தக் கூட்டத்தினரின் தோள் பட்டையில் ஒரு மஞ்சள் நிறத் துண்டுத் துணி தொங்கிற்று. அதில் நீல வர்ணத்தில் 'குடியேறியவர்'

என்று குறிக்கப் பட்டிருந்தது. முகங்களைப் பார்க்கும் போது பூலோக வாசிகள்தான் என்பது நன்ருகத் தெரிந்தது.

ஆமாம்......! பூலோக வாசிகள்தான்! கண்ணப்ப நாயனர், காரைக்கால் அம்மையார், நந்தனர், சிறுத் தொண்டர்......இன்னும் யார் யாரோ இருந்தார்கள்.

அவர்கள் பேச்சு பெரிய விவாதமாக அமைய வில்லை. ஆளுக்கு ஒரு வார்த்தைதான் பேசினர்கள். அது அவர்கள் சொர்க்க லோகத்துக்கு வந்த விதத்தைப் பற்றியது!

"என்னுடைய இரண்டு கண்களையும் பெயர்த்து அப்பிய பிறகுதான் கடவுளின் கருணை கிடைத்தது"

கண்ணப்ப நாயனர்.

"என் குழந்தையைத் துண்டு போட்டுக் கறி சமைத்து அதன் தலையை நானும் என் மனைவியுமே. இடித்துத் துவையல் அறைத்து அன்னமிட்டேன் அதற்குப் பிறகுதான் சிவபெருமான் சித்த மிரங்கி என்னை யாட்கொண்டார்.

சிறுத்தொண்டர்

"அக்கினியிலே மூழ்கித் தீட்டையெல்லாம் பொசுக்கிக் கொன்றுவிட்டு பொன்மேனியோடு வா என்று தில்லைத் தீக்ஷிதர்கள் கனவிலே தீன தயாபரன் சொல்லிவிட்டாராம். அந்தத் தியாகத்தை நான் செய்த





பிறகுதான் தில்லையப்பனின் திருப்பாத தரிசனம் கிடைத்தது என்க்கு."

நந்தனர்

"உடலிலே உள்ள சதைகளையெல்லாம் கழித் தெறிந்துவிட்டு, இரத்தத்தை வடித்துவிட்டு, எலும்பு உருவமாக—பேயாகி—தலைகீழாக நடந்து சென்றேன் —பீடுடைய பெம்மானிடம்! இந்தக் கஷ்டத்திற்கு ஆளான பிறகுதான் கைலாசபதி கடாக்ஷம் பாலித்தார் என்னிடம்."

காரைக்கால் அம்மையார்

"ஆலயங்களில் புல் செதுக்கினேன், அந்தணராம் திருஞான சம்பந்தரின் பல்லக்குத் தூக்கினேன். அதை யெல்லாம் செய்த பிறகுதான் அமரர் உலகம் வர அனுமதி கிடைத்தது, எனக்கு!"

அப்பர்

"மனிதனுக்கு மானம் பெரிது. அந்த மானத் தையே விலக்கிவைத்து, என் மனைவியை பரமசிவனேடு போ எனக் கூட்டி அனுப்பி வைத்தேன், அந்தத் தியா கத்தின் பரிசாகத்தான் இந்தச் சொர்க்க லோகத்தின் வாசத்தைப் பரமன் எனக்கு அளித்தார்."

இயற்பகை நாயனர்,

"என் முழங்கையைச் சந்தனக் கட்டைக்குப் பதி லாகத் தேய்த்துப் பகவத் பூசை புரிந்தேன், அதன் பலன்தான் எனக்குச் சொர்க்க லோகம்."

மூர்த்தி நாயனர்.

"அப்பப்பா! இந்த லோகத்திற்கு வர எத்தனை பேரைக் கொலை செய்திருக்கிறேன் தெரியுமா? சிவனைத் தூஷித்தவர்களை யெல்லாம் மழுவால் வதைத்துக் கொன்று போட்டேன். அந்தப் பிணங்களை யெல்லாம் பிறைசூடும் பித்தரிடம் காட்டிய பிறகுதான் இந்தப் பேறு எனக்குக் கிட்டியது."

எறிபத்த நாயனார்.

"சிவனுக்காகச் சேமித்து வைத்திருந்த செந் நெல்லைப் பஞ்சகாலத்திலே சாப்பிட்டார்கள் என்பதற்காக... பக்தியின் காரணமாக என் தாய், தந்தை, என் ஆசை மனைவி......நெல்லைத்தின்ற......தாயின் பாலைக் குடித்திருக்கும் என்பதற்காக.........என் அன்புக் குழந்தை ஆகியோரைக் கொடுவாளால் வீசிக் கொலை புரிந்தேன். அதன் பிறகுதான் என் குற்றத்தை மன்னித்துக் கொன்றையணி செஞ்சட்டையார் காட்சி அளித்தார்."

கோட்புலி நாயனார்.

இப்படிப் பக்தர்கள் தங்கள் தங்கள் தியாகங்களைக் கூறிப் பெருமிதங் கொண்டனர். பெருமூச்சு விட்டனர்

"உங்களுக்கும் ஆகஸ்ட் தியாகிகளுக்கும் வித்தியாச மில்லையப்பா" என்ற திடீர்க் குரல் கேட்டு, பேச வாயெடுத்த கண்ணப்பர் நிறுத்திவிட்டார்.

எல்லோரும் திரும்பிப் பார்த்தனர். ஒரு வாலிபம் மறைந்த மங்கையின் தோளில் கை போட்டபடி ஒரு பூணூலணிந்த அய்யர் நின்றார். எல்லா பக்த சிரோன்





மணிகளும் அவர் வாயைப் பார்த்தபடி இருந்தனர். அந்த அய்யர் பேசினார்.

"நீங்கள் எல்லாம் மோட்ச லோகம் வரப் பெரிய பெரிய தியாகங்கள் செய்ததாகப் பெருமை யடித்துக் கொள்கிறீர்களே; அதை நினைத்தால் எனக்குச் சிரிப்பு வருகிறது.

தந்திக் கம்பிகளையும் தபாலாபீசுகளையும் தகனம் செய்து, இரும்புப் பாதைகளை யெல்லாம் பெயர்த்தெடுத்த காங்கிரஸ்காரனுக்குப் பெயர் தியாகிதான்! தந்திக் கம்பிகளை அறுப்பது தகாது எனக் கூறி, ஆகஸ்ட் போராட்டம் ஆகாது என முழக்கி அதற்கு எதிரிடையாக நின்ற ஆச்சாரியாருக்கும் பெயர் தியாகிதான்! என்ன விழிக்கிறீர்கள்? நான் இப்பொழுது பேசுவது தமிழ் நாட்டு அரசியல் விஷயமாக்கும்!

சொர்க்கலோகம் வர, சொல்ல முடியாத தொல்லைகள் அனுபவித்ததாகச் சொல்லுகிறீர்களே; இதோ பாருங்கள் நான் எந்தவிதச் சிரமமும் இன்றி சிவலோகம் வந்திருக்கிறேன்.

(பக்தர்கள் ஆச்சரியத்தால் திகைத்துவிட்டார்கள்)

'ஆச்சரியப்படாதீர்கள் அன்பர்களே! இதோ என்மேல் சாய்ந்து கொண்டிருப்பது என் தாய்'

(கோட்புலி நாயனார் குறுக்கிட்டு) 'உமது தாயாரா?'

"ஆமாம், என் தாய்! என்னைப் பத்துமாதம் சுமந்து பெற்றதாய். அழகுத் தொட்டிலில் இட்டு ஆராரோ

பாடிய தாய்! இந்தத் தாயாரை நான் என் தாரமாகக் கொண்டிருக்கிறேன். இங்கு மட்டுமல்ல, பூலோகத்திலேயே இந்த அன்னை என் ஆசை நாயாகியாக இருந்தாள். இவள் என்னைத் தொட்டிலில் போட்டு ஆட்டினாள். நான் இவளுக்குக் கட்டிலில் இன்ப மூட்டினேன்.

மாதாவை மனைவி யாக்குவது மகா பாபமல்லவா என்பீர்கள்; இதைவிட மகா மகா பாபமாக, எங்களை மஞ்சத்தில் கண்டுவிட்ட என் தகப்பனாரை உடனே கொன்று போட்டேன்.

உனக்கா சொர்க்க வாசல் திறந்தது என்று கேட்கிறீர்களா? ஆமாம்; எனக்குத்தான் சொர்க்கம் சுலபத்தில் வழிவிட்டது.

'அரகர மகாதேவா' என்றேன்; அம்மையை அணைத்தபடி அப்பன், ரிடபவாகன் ரூடராய் அருள் மழை பொழிந்தார். ஆனந்தமாக சொர்க்க பூமிக்கு வந்துவிட்டேன்."

நாயன்மார்கள் ஸ்தம்பித்து விட்டார்கள், காரைக் காலம்மை "இது உண்மையா?" என்றார்.

"சந்தேகம் வேறு? ஐயமிருந்தால் திருவிளையாடல் புராணம் மாபாதகம் தீர்த்த படலத்தைப் பாருங்கள்" என்றார் அய்யர்.

"பாபியாகிய உமக்கு மாத்திரம் இவ்வளவு சுலபத்தில் சொர்க்கலோக வாழ்வு கிடைக்கக் காரணம் என்ன?" என்று கேட்டார் சிறுத்தொண்டர்.





"இதுதான் காரணம்" என்று தன் பூணூலை உருவிக் காட்டினார் அய்யர். "நான் மட்டுமல்ல; சுந்தரமூர்த்தி நாயனாரை தாசி வீட்டுக்குப் பகவானே அழைத்துச் சென்றார்......தாசி வீட்டுத் தாம்பூலத்தோடு கோயிலுக்குள் சுந்தரமூர்த்தியை வரச் செய்தார்...... சொர்க்க வாழ்வு சுந்திரமூர்த்திக்குச் சுலபத்திலே அளித்தார். அதற்கு இந்தப் பூணூல்தான் காரணம்" என்று முடித்துவிட்டு அய்யரும் அம்மையும் சென்றார்கள்.

"அப்படியானால் ஆகஸ்ட் போராட்டத்தை மறுத்து ஆச்சாரியார் தியாகி ஆனதற்கும்......" என்று கண்ணப்பர் முடிப்பதற்குள்...... "ஆமாம் பூணூல் தான் காரணம்" என்று பதில் கூறினார் எறிபத்த நாயனார்.

"நாமெல்லாம் எவ்வளவு கஷ்டப்பட்டு........எவ்வளவு மகத்தான தியாகங்கள் செய்து இந்த மகேஸ்வரன் திருவடியை அடைந்தோம்......மாபாதகம் செய்த இந்தப் பிராமணன் ஒரு பூணூல் உதவியால் கைலாசம் வந்துவிட்டானே" என்று சோகமூச்சு விட்டார் மூர்த்தி நாயனார்.

"நாமெல்லாம் திராவிடர், அவர் ஆரியர்...... சொர்க்க லோகம் போவதில் கூட ஆரிய திராவிட வேறுபாடு வேரூன்றி விட்டதப்பா" என்று இரண்டு துளி கண்ணீர் விட்டார் அப்பர்.

இந்நிலை மாறத்தான் "இனமுழக்கம்" நடைபெறுகிறது என உரத்துக் கூறியபடி எழுந்தேன் நான்.

"என்னடா தம்பி......சொப்பனங் கண்டாயா?" எனக் கேட்டபடி என் தாயார் என் தூக்கத்தைத் தெளிவித்தார்கள்.

என் தூக்கம் கலைந்தது. காமராஜர்—கிராமணியார்—தூக்கம் கலைய வேண்டுமே?





# முரசறைவாய்

"வாளை எடு! வாழ்வா? சாவா? என்பதைப் போரில் புரிந்து கொள்வோம்" என்பதற்கு மட்டுமல்ல. "வாழ்விலோர் திருநாள்" பாடி, வளமார் நாட்டை வாழ்த்திடவும் முரசு முழங்குவதுண்டு.

அந்நாள் ஆண்ட மறத்தமிழன் கனகனையும் விசயனையும் களத்தினில் சந்திப்பேன். போர்முரசு கொட்டிப் புலிப்பாய்ச்சல் நடத்துவான். அந்த ஆரிய மன்னர் சிரம் நொறுங்க, கண்ணகி, சிலைக்குக் கல்லேற்றி சிங்க நடை போட்டு வருவான்.

இரத்தம் படிந்த வெற்றி முரசின் ஒலியும், 'வாழ்க தமிழன்' என்ற கீதமும் இமயத்தில் எழுந்து, விந்தியத்தில் எதிரொலித்து, கன்யா குமரியின் கடலோசையில் கலங்கும்.

வாடிக் கிடந்த காதலியை வெற்றி முரசம் துள்ளியெழச் செய்ய—புதுத் துடிப்பால் பூரித்த இதயங் காட்டி பொன்னழகி வழிபார்த்து நிற்க 'தென்றலே! என்னைத் தேடித் துவண்டாயோ? என்று வந்த காளை, வாய் திறப்பதற்குள்...—மணவாளன் மார்பினிலே காயங்கண்டு பனிப் பார்வை வீசி, அவன் மலைத்தோளில் முகத்தை ஒட்டிக்கொள்ள — அந்த மகிழ்ச்சியை ஒரு கவிதையாக மாற்ற நினைத்து, ஒரு எல்லைக்குள் அதை

அடக்க முடியாமல் தோல்வியால் தொங்கிய முகத்துடன் ஒரு புலவன் திரும்பிவிட...இங்ஙனம் காதலும் வீரமும் சுரை புரண்டோடியது திராவிடத்தில் ஒரு நாள்!

ஆனால் இவையெல்லாம் பயனற்ற இன்றைய பாட்டிச் கதையல்ல! நம் பாட்டனும் பாட்டியும் வாழ்ந்த வரலாறு! பெற்றிருந்த பண்பு!

ஆரியர் உருட்டி விளையாடும் உருட்டுச் சட்டிப் பொம்மைகளாய், ஆங்கில ஏகாதிபத்தியத்தை விடக் கொடிய வடவர் ஏகாதிபத்தியத்தின் வால் பிடிப்பவர்களாய்-சீரிளமைத் தமிழ் ஒழித்து, செந்தமிழ் நாடழிக்க இந்தி மொழிக்குப் 'பாராக்கு' கூறும் சிப்பாய்களாய், இங்குள்ள தோழர் இருக்குங் காலத்திலேயே பொங்கல் விழாக் கண்டு நமக்குப் பூரிப்பு தங்கவில்லை யென்றால், காமராஜர்கள், சண்முகங்கள், ஜீவாக்கள் தோன்றியிராத அந்தக் காலத்தில் — மானத்துக்கும் தமிழனுக்கும் நீங்காத தொடர்பு இருந்த அந்தக் காலத்தில்— களத்தில் ஈட்டியைச் சுவைத்துக் கிடந்த வீர பரம்பரை வாழ்ந்த அந்தக் காலத்தில்—பொங்கல் இப்படிச் சோற்றுப் பொங்கலாகவா இருந்திருக்கும்!

'அறுவடை முடிந்ததா அத்தான்?' என்று அவள் கேட்க, எதிரிகளின் படையை நம் மன்னர் அறுத்துக் குவிக்கும் போது பகை மன்னன் மார்பிலிருந்து உருண்டோடிய மாணிக்கத்தைப் போல இதோ பார் நெல் மணிகளை!' என்று கணவன் பதில் கூறி யிருப்பான்.





'அதோ பார் கொல்லையில் ஆரியனின் வயிறு போல வைக்கோற்போர்!' என்று காட்டி இருப்பான்!

'அத்தான்! பதரைத் தூற்ற வேண்டாமா?' எனக் கேட்டு முறம் எடுக்கச் செல்பவளைப் பார்த்து, 'கண்ணே! தமிழினத்தில் வந்து கலக்கும் ஆரியக் கொள்கைகளை அகற்றுவதுபோல் இந்தப் பதர்களை அகற்று' எனச் சொல்லி இருப்பான்.

திராவிடனே! அந்நாளை நினைத்துப் பார்! பசி பசி என்று பச்சிளங் குழந்தை அழ......அதுகண்டு பெற்ற தாய் அழ.......'பொங்கலிலும் நாம் பட்டினி தாண்டா கண்ணே!' என்று தந்தை அழுகின்ற இந்நாளின் கோர நிலையையும் நினைத்துப் பார்!

கிரேக்க ரோமானிய நாடுகள் உன் நாட்டுப் பொருளுக்கு வாய் பிளந்து கிடந்தனவே! நீ ஒரு பிடி சோற்றுக்கும் ஒரு முழத் துணிக்கும் வாய் பிளந்து கிடக்கிறாயே!

இமயமும் இலங்கையும் உன் ஆணை கேட்டுத் தலை கவிழ்ந்தனவே! இன்று நீ அடிமையாக வாழ்கிறாயே! 'இனிமைத் தமிழ் மொழி எமக் கின்பந்தரும்படி வாய்ந்த நல் அமுது' என்று இசைத்தனையே — இன்று இந்திக்குத் தண்டனிடுகிறாயே!

சரித்திரத்தில் திரையிடப்பட்டுள்ள உன் பெருமைகளைக் கேட்டுப் பார்! வேங்கை யொத்த பகைவர் எத்தனையோ பேர் உன் வேல்பட்டு வீழ்ந்தனரே — வீர

மகனே! உன் கண்களிலே கனல் என்ருல் எதிரியின் பாசறை தீய்க்கு இரை யென்று தானே பொருள்! உன் வீர முழக்கம் வேற்று மன்னன் கோட்டைக்கு வேட்டாயிற்றே! அவை யெல்லாம் இந்நாள் எங்கே?

கடல் கொள்ளாமல்—களம் புரண்ட இரத்த வெள்ளம் கொள்ளாமல் — பகைவரின் போர்த்திறங் கொள்ளாமல்—வீரத்தை விலை கேட்கும் ஆரியம் கொண்டது ஏன்?

அந்நிலை மீளாதா? புது வாழ்வு மலராதா? மலரும்! மலர வேண்டுமானுல் திராவிடா! இந்தப் பொங்கலில் உன் உள்ளம் பொங்கட்டும்! குன்றெடுக்கும் நெடுந்தோளன் குலத்தினனே! குள்ள நரிக் கூட்டத்தின் குண மறுக்கக்கூர்வாள் எடு! சாணிப் பிள்ளையாரும் சீனிப்பாயசமும் பொங்கலின் குறிக்கோளல்ல! கோணிக் கிடக்கும் சமுதாயத்தின் குறை தவிர்க்க முரசறைவாய்! போர் முரசறைவாய்.





# பழிக்குப் பழி

“ நம் நாடு வளமையாக இருக்க வேண்டுமானுல், நாட்டிலுள்ள வகுப்புவாதக் குரோதங்களை அடியோடு ஒழிக்க வேண்டும், மகாத்மாவின் வாழ் நாளில் முழுவெற்றி அடைய முடியாத வகுப்புவாத ஒழிப்பை அவரது மரணத்தின் விளைவாக வேனும் பெற வேண்டும்.........”

இது திராவிடர் கழகத்துத் தீர்மானமல்ல! காங்கிரஸ் காரியக் கமிட்டி முடிவின் சாரம்.

நாம் வரவேற்கிருேம், ‘சொன்னேம், சொல்கிருர்கள்’ என்று பெருமைப்படுகிருேம். நமது பாசறையின், நமது கீதத்தின் எதிரொலி இது என மகிழ்கிருேம். மதமெனும் பேய் பிடியாதிருக்க வேண்டுமென நாம் கூறிய காலத்தில் நமக்குக் கிடைத்தது நாத்திகர் என்ற பட்டம். இன்று அவர்கள் கருத்தில் இது கலக்க, காந்தியாரைப் பலி கொடுக்க வேண்டியதாயிற்று.

இந்தத் தெளிவும் முடிவும் முன்னமே செயலாக மாறியிருந்தால் ஒரு உத்தமரின் கோரக் கொலை நடந்திருக்காது.

நடந்ததை மறப்போம். நாட்டு நலத்தில் விழி வைத்து......இனியாவது நல்லவழி நடப்போம் .... ....

என்ற உறுதி மொழிதான் இனி திரா[illegible]குத் தேவை!

"வகுப்பு வாதம்" வீழ்க என்கிறது காங்கிரஸ் காரியக் கமிட்டி.

'சாபத்திற்காளான அந்த வகுப்பு வாதம் [illegible]?.... ....அந்த வகுப்பு வாதத்தின் 'உயிர் நிலை' எங்கே இருக்கிறது......?' என்ற ஆராய்ச்சி அவசியம் தேவை.

'அல்லித் தண்டில் நுழைந்து பாதாள லோகம் சென்றால்............அங்கிருக்கும் பாறைகளின் இடுக்கில் பறந்து கொண்டிருக்கும் பெரிய வண்டில் இருக்கிறது மயில் இராவணன் உயிர்' என்பார்கள் பௌராணிக போதகர்கள். அதைப் போலவேதான் வகுப்பு வாதத்தின் உயிர் நிலையும் அமைக்கப்பட்டிருக்கிறது. வகுப்பு வாதம் விழ வேண்டுமானால் மேற் போக்கான திருத்தங்கள் பயன்படா! அதன் ஆணிவேர் அறுபட வேண்டும். வகுப்புகளை அனுமதித்துக் கொண்டு வகுப்புவாதத்தை அழிக்க நினைப்பதுஆகாத செயல்! நெருப்பையும் மூட்டிவிட்டு அதை அணைக்கவும் நீர் தேடுவது போல!

வகுப்பு ஒழிந்தால் வாதம் ஒழியும்—வகுப்பு வளர்ந்தால் வகுப்பு வாதம் வளரும். பார்ப்பனீயம் ஆகாது—கூடாது—என்று நாம் பேசுவது வகுப்பு வாதம் என எதிரிகளால் பிரச்சாரம் செய்யப்படுகிறது.

வகுப்புக் கலவரத்தைக் கிளப்பிவிடும் சாதனத்திற்குப் பெயர் வகுப்பு வாதமா? அல்லது வகுப்புப்





பேதத்தைத் தகர்த்தெறியும் திராவிடர் கழகக் கொள்கைகளுக்குப் பெயர் வகுப்பு வாதமா?

கலகமும் போராட்டமும் ஏற்படுவதற்குக் காரணம் தன்னுடைய மனிதாபிமானமற்ற கொள்கைகளை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு இந்த நாட்டில் அக்கிரகாரங்களில் — ஆலயங்களில் — சிற்றுண்டிச்சாலைகளில்—அரசியல் துறைகளில் தங்கள் சாதி உயர்வைக் காட்டிக் கொண்டிருக்கும் பார்ப்பானியமும்—பிராமண சேவா சங்கங்களும் வகுப்புவாத ஸ்தாபனங்களாக்கப்பட்டு ஒழிக்கப் படவேண்டுமா!

வகுப்புக்கள்—சாதி முறைகள்—பிறவியின் காரணமாக உயர்வு தாழ்வுகள் அழிக்கப் பட்டால் பறையன்—பள்ளன்—பார்ப்பனன் என்ற பேதங்கள் மறையும். சாதிக்கொரு சங்கம்—சங்கங்களுக்குள் போட்டி....... என்ற நிலை மாறும். சமத்துவம் பூக்கும். சமதர்மம் ஓங்கும். காந்தியாருக்காகக் கட்டப்படும் உண்மையான நினைவுச் சின்னங் கூட இதுதான்!

வகுப்பு வாதம் வீழ்வதற்குச் சரியான வழி...... வகுப்பு வாதத்தின் உயிர் நிலையில் வாள் வீசுவதுதான்! நமது ஆட்சியாளர் இதைச் செய்ய வேண்டும்.

'மதத்தை அடிப்படையாகக் கொண்ட ஸ்தாபனங்கள் அரசியல் இலட்சியங்களுடன் வேலை செய்வதற்கு இடந்தரக் கூடாது.'

காங்கிரஸ் காரியக் கமிட்டியின் இந்தத் தீர்மானம் மிகவும் பாராட்டத் தக்கது.

மதத்தை அடிப்படையாகக் கொண்ட ஸ்தாபனங்கள் அரசியல் இலட்சியங்களோடு வேலே செய்வதற்கு மட்டுமல்ல—மதத்தை அடிப்படையாகக் கொண்ட ஸ்தாபனங்கள் இருப்பதுகூட ஆபத்து—அபாய அறிகுறி—அடுத்து ஒரு கோட்சே தோன்றக் காரணமாகி விடலாம் என்பது நம் கருத்து.

மத ஸ்தாபனங்கள் அரசியல் இலட்சியங்களோடு வேலே செய்வதால் மட்டுமே......இம்மாதிரிக் கோணல்கள் விளேவதாகக் கூற முடியாது.

'பறையனுக்கு என்னடா பக்தி?' என்ற பதட்டம் நந்தனே நெருப்பில் தள்ளி 'ஜோதியில் கலந்தான்' எனக் கூறிற்று. மதத் திரையில் அந்த மாபெரும் சதி மறைந்ததே!

'மதமெனும் பேய் மாய்க' எனக் கூறிய இராமலிங்கர் மதவெறியர்களால் கொலே செய்யப்பட்டார். 'அருட் சோதியிலே ஐக்கியமானுர்' என்ற அண்டப்புளுகு உருவாயிற்றே!

மதபக்தி மக்கள் கண்களே—கருத்தை மறைத்தது.

எண்ணுயிரம் சமணர்களேக் கழுவேற்றி......கழுமரங்களுக்கு 'இரத்த அபிஷேகம்' செய்து வைத்தார் திரு ஞானசம்பந்தர்.

ஏனென்று கேட்கவில்லே மக்கள்! மத விசுவாசம் அவர்களே மௌனிக ளாக்கிற்றே!

இப்பொழுதுதான் என்ன; காந்தியார், புதுடில்லியில் பொதுமக்கள் முன்னிலேயில் சுடப்படாமல்—





வார்தா ஆஸ்ரமத்தில் கொல்லப்பட்டிருந்தால், அவரை அந்தக் கொலேக்காரர்களே எடுத்துப் புதைத்துவிட்டு, "காந்திஜீ திடீரென்று புஷ்பக விமானத்தில் ஏறிச் சொர்க்கலோகம் போயிருக்கிருர்" என்று புராணம் பாடி யிருப்பார்கள். மதவெறி செய்த சதி மறைக்கப் பட்டிருக்குமே!

நந்தனே நாசமாக்கி—வள்ளலார் வாழ்வை வெட்டி—சமணரைச் சாய்த்து இதுவரை இன்ப வாழ்வு நடத்தியதைப் போலவே இனியும் இந்தச் சதிகார மதம் வாழ, வழிகோலப்பட்டிருக்கும். ஆனல்...!

காந்தியாரின் படுகொலே, இந்து மதத்தின் இரத்தம் தோய்ந்த நாக்கை, நமக் கெல்லாம்—இல்லே—நம் பேச்சைக் கேளாமல் இருப்பவர்க் கெல்லாம், படம் பிடித்துச் காட்டி விட்டது.

இதற்காகத்தான் சொல்லுகிருேம் மதவெறியின் கடைசி இரையாக மாவீரர் காந்தி இருக்கட்டும் என்று!

காந்தியாரின் சோக முடிவு பாம்புக்குப் பால் வார்த்த கதை!

எந்த வர்ணுஸ்ரமத்தைக் காக்க வழி வகுத்தாரோ அந்த வர்ணுஸ்ரமம் அவர் வாழ்வைக் குடிக்கும் பாம்பாயிற்று!

எந்த இந்துமதச் சீர்திருத்தம் தேவை எனப் பணி புரிந்தாரோ...அதே இந்துமதம் அவருக்கு இறுதியில் பரிசாக மூன்று குண்டுகளே அளித்தது.

காந்தியார் அகிம்ஸைக்காகப் பாடுபட்டார்......... அதில் அவர் வெற்றி யடையவில்லை என்பதற்கு கோட்சேயின் கோரச் சிரிப்பே என்று!

காந்தியார், உண்மை — சத்திய நெறி இவைகளைப் போதித்தார். அதில் அவர் தோல்வியுற்றார் என்பதற்குச் செய்திகளைத் திரித்துப் போட்டு அராஜகத்தைக் கிளப்பிவிடும் இந்து—மதத்தின் ஏடுகள் சான்று!

காந்தியார், இந்து முஸ்லீம் ஒற்றுமைக்காகப் பாடு பட்டார் — அதிலும் அவருக்கு வெற்றி இல்லை என்பதற்குப் பாகிஸ்தான் பகிர்ந்து அளிக்கப் பட்டதே சான்று.

காந்தியார் அமைதிக்கு வழி கோலினார்......அதிலும் அவர் ஆறுதல் பெறவில்லை என்பதற்கு நாட்டிலே பெருத்த கலகங்களே சான்று!

காந்தியாரின் வெற்றிப் பாதைகளிலே முட்டுக் கட்டையாக நின்றது எது?.......எது? எது.......?

மதம்! மதவெறி!

இந்த வெறி இந்த மத வெறி, ஒரு விடுதலை வீரரை வீழ்த்தியது......!

இந்த மதத்தைப் பழிக்குப் பழி வாங்க வேண்டாமா? மிஞ்சியுள்ள தலைவர்களையாவது காப்பாற்ற வேண்டாமா? திராவிடரே? சொல்லுங்கள்!

---



# ஆரியம் பேசுகிறது!

இரணியன் மகன் பிரகலாதனுக்குத் தந்தை என்ற வாஞ்சையைத் தவிடு பொடியாக்கி....தந்தைக்கு எதிரியாக பிரகலாதனை ஆட்டி வைத்து இரணியனின் உயிர் குடித்து ஏப்ப மிட்டேன்.

தென்னிலங்கை வேந்தன் இராவணனுக்கு இளையோன் விபீஷணன். அவனிடத்தில் ஆசை வலை விரித்தேன். அவன் சுருண்டான். இலங்கை இருண்டது. இராவணனை வஞ்சம் தீர்த்து வாழ்ந்தேன்.

வாலியும் சுக்ரீவனும் பிரிபடாத சகோதரர்கள், குடும்பத்திலே தகராறு! அதை என் குல வளர்ச்சிக்குப் பயன்படுத்தி வாலி சுக்ரீவர்களை மோத விட்டு வாலி வதைப் படலம் கண்டேன்.

எண்ணாயிரம் சமணப் பெரியோர்! எப்பாடுபட்டுச் சமணத்தை வளர்த்தனர் தெரியுமா? குலச் சிறை யென்று ஒரு கோடாரிக் காம்பு கிடைத்தான். அவனைச் சமணர் விரோதியாக்கி எண்ணாயிரம் பேரையும் துடிக்கத் துடிக்கக் கழுவேற்றி, களிப்புக் கொண்டேன்.

அவ்வளவு ஏன்? காந்தியார் உயிரைக் கோட்சே உருவில் உறிஞ்சினேன். உலகம் தேம்பியழுத போது நான் தித்திப்பு வழங்கினேன்.

என் கோர சொரூபத்தை ஒரு சில திராவிடப் பத்திரிகைகள் எடுத்தெழுதின என்பதற்காக ஓமாந்தூராரை அதட்டிக் கேட்டேன், "ஆரியத்துக்கு எதிர்ப்பா?" என்று! ஆட்சி பீடம் ஆடிற்று. அதன் எதிரொலி......கறுப்புப் படையின் மேல் அடக்கு முறை!

என்ன முறைக்கிறீர்கள்? நான் நினைத்தால் யாரையும் அரியாசனத்தி லிருந்து அகற்றி விட முடியும்.

உங்கள் இனத்தில் விபீஷண சுக்ரீவர் இருக்கும் வரையில் எனக்கு இங்கு விருந்துதான்!





# கோவையில் கருணாநிதி

**அன்புள்ள தலைவர் அவர்களே! தோழர்களே!**

தென் கோவை தி. மு. கழகச் சார்பில் நடைபெறும் இம்மாபெரும் பொதுக்கூட்டத்தில் என்னைக் கலந்து கொள்ள விரும்பிய தோழர்கட்கு வணக்கமும் நன்றியும் உரியதாகுக.

இந்தி எதிர்ப்பில் நாம் அடைந்த வெற்றி குறித்த விழா இதுவென்று அன்பர் இராச மாணிக்கம், துவக்கத்தில் கூறினார்.

இந்தி கட்டாயம், கட்டாயம் என்று கர்ஜித்த சனம்கள், இப்போது இல்லை, இல்லை யென்று கரகரத்த குரலிலே கூறுகிற நிலைக்கு இறங்கி வந்துள்ளனர்.

நமது எதிர்ப்பின் முடிவு என்னாகுமோ என்று யோசித்து, எதிர்ப்புச் சக்தி எப்படி யெப்படி வளருமோ என்று ஆருடம் பார்த்து, இந்தியை ஒழிப்பதற்காகத் திராவிடர் இதுவரை சிந்திய இரத்தத்தைக் கணக்கெடுத்து, செந்தமிழைக் காக்கச் சிறை சென்ற தொண்டர்களின் தொகையை எண்ணிப் பார்த்து, இவர்களை யெதிர்க்க இனியு மாகாது என்ற உண்மையை புத்திசாலித்தனமாகப் புரிந்து கொண்டனர்.

அதன் விளைவுதான் கட்டாய இந்தியின் இன்றைய விதவைக் கோலம்.

இந்தியை எதிர்த்து இரண்டு முறை பெரும் போர் நடைபெற் றிருக்கிறது. இதில் வெற்றி பெற்றோம். என்பது பெருமைக் குரிய செய்தியாக இருக்கலாம்!

ஆனால் தமிழை அழிப்பதற்காக, ஒழிப்பதற்காக, தமிழ் நாட்டில் இரண்டு முறை முயற்சி நடைபெற்றது என்பது வெட்கத்திற்குரிய, வேதனைக்குரிய செய்தி யாகும்.

இந்தியை ஆரியம் அழைத்துவர அதற்குத் தமிழர் சிலர் கதவும் திறந்து விட்டார்கள் என்பது விவரிக்க முடியாத அவமானம்; அதுமட்டு மல்ல, கதவு திறந்து அவளைச் சிங்காரித்தும் கூட்டி வந்தனர்.

கட்டாய இந்தி வந்தது. தமிழர் அதனை எதிர்த் தனர்; தன்மானத் தமிழர் பெரும் படை அதனை ஒழித் திடப் பெரும் போர் புரிந்தது.

ஓடிவந்த இந்திப் பெண்ணே கேள்; நீ தேடி வந்த கோழையுள்ள நாடிதல்லவே''

''என்று போர்ப் பரணி பாடினர், சிங்கத் தமிழர் கள்.

முதற் போராட்டத்திலே பெரியார் பெல்லாரி சிறையில் அடைக்கப்பட்டார். தளபதி அண்ணாவுக்கு ஆறுமாதம் சிறை; தாளமுத்து நடராசன் பிணமாயினர்.





ஆயிரத்திற்கு மேற்பட்டவர் கைது; என்றபடி போராட்டம் நடந்தது.

ஆம். தாளமுத்து, நடராசன் என்ற இரு இளங் காளைகள் சிறையிலே இறந்தனர். நாம் அவர்களின் கல்லறையைத்தான் கண்டோம்.

கன்னித் தமிழின் பகையை, கட்டாய இந்தியை எதிர்த்துப் போரிட அனுப்பிய அவரின் தாய் தந்தை யர். அவர்கள் வெற்றியோடு திரும்பி வந்து, தமிழைக் காத்திட்ட என் மகனே, மாவீரனே, என்று புகழ்ந்து மகிழ்ந்திடவில்லை, அவர்களின் பிணங்களைத்தான் கண் டனர்.

இவ்வளவு இரத்தச் செலவிற்குப் பிறகு கோரச் சிறையின் இரும்புக் கதவுகளுக்கிடையே பலர் சென்ற பின்னர், முதல் இந்திப் போர் முடிந்தது.

மீண்டும் இந்தி வந்தது; கட்டாயமாக. ஆச்சாரி யார் காலத்திலே அல்ல. தமிழர் அவினாசியார் காலத் திலே.

மீண்டும் இந்தி கொஞ்சிடும் வஞ்சியாக வந்தாள்; ஆனால் நாங்கள் அவளிடம் மயங்கி விட வில்லை; எங்க ளுக்குத் தெரியும், அவள் பாஞ்சாலி யென்று.

இந்தி மயிலென ஆடி வந்தது. அதன் லாவகத் திலே நாங்கள் மயங்க வில்லை; எங்களுக்குத் தெரியும் அது மயிலல்ல; வான் கோழி யென்று.

கட்டாய இந்தி படமெடுத் தாடும் பாம்பெனச் சீறி வந்தது. அதனை எதிர்த்திடப் பயந்தவர் மகுடிதான் ஊதினர். ஊத முடிந்தது; ஆனால் நாங்கள் தான் அதன் கொட்டத்தை அடக்கிடும் கீரிகள் ஆனோம்.

இரண்டாம் முறை இந்தி நுழைக்கப்பட்டபோது நாங்கள் நாட்டு நிலையை நன்றாக, நிதானமாகப் புரியும் படி ஆள வந்தாருக்கு எடுத்துக் காட்டினோம்.

தமிழாசிரியர் தடுத்தனர், கட்டாய இந்தி வேண்டாமென்று.

தமிழர்கள் கட்சிபேதமற்று மறைமலை அடிகளார் தலைமையிலே கூடித் தமது எதிர்ப்பைக் காட்டினர், சென்னையிலே.

தீர்மானங்கள் தீட்டிக் காட்டினோம். தமிழ் நாடெங்கும் தமிழ் வாழ்க, கட்டாய இந்தி ஒழிக என முழங்கிற்று. சாமான்ய முறையில் கூறினோம் கூடாது என்று. கேட்கவில்லை.

வேண்டாம் கட்டாய இந்தி என்று சிவஞான கிராமணியாரும் கூறும்படி செய்தோம்; கெஞ்சினோம், மன்றாடினோம் மந்திரிகட்கு மதிவரும், மாற்றுவர் என்று கருதினோம்; ஆனால் எங்களுடைய வேண்டுகோள், கெஞ்சுதல், தீர்மானங்கள் யாவும் வெறும் கேலிச் சித்திரங்க ளாகத்தான் கருதப் பட்டன.

என்ன முடியும் இதுகளால் என்று இறுமாப்புடன் இருந்தனர்; சட்டம் பேசினர். சிறையிலே தள்ளுவோம்





எனச் சீறினரே தவிர "ஏன் இந்தி கூடாது எப்படி அது தமிழர்க்குக் கேடு" என்று ஆராயவோ சிந்திக்கவோ மன மில்லை மந்திரிகட்கு.

மாறாக அடக்கு முறையை அள்ளி வீசினர். சிறை, போலீஸ், தடியடி தர்பார் தினசரிக் காட்சிக ளாகிவிட்டன. எனினும் 'இந்திப் போர் நீண்டு நடைபெற்றது. அதன் முடிவு என்ன? பலன் என்ன?

இன்று இந்தி கட்டாய பாட மில்லை எனப் பகிரங்கமாக அறிவிக்கப் பட்டு விட்டது ஆளவந்தார்களால். இது நமக்கு வெற்றி. மகிழ்ச்சி, மட்டற்ற மகிழ்ச்சி.

வெற்றிக் களிப்பிலே மார் தட்டி நிற்கும் இதே நேரத்தில் நாம் சற்று சிந்திக்கவேண்டும்; இந்த வெற்றி எப்படிக் கிட்டியது? எதனால் கிடைத்தது.

எத்தனை யெத்தனை தாய்மார்கள் அடக்கு முறைக்கு ஆளானதன் பலன்! தாளமுத்து நடராசன்கள் கல்லறைகள் தந்த பரிசு, குடந்தையின் வீதிகளிலே குண்டாந்தடிப் பிரயோகத்தால் ஓடிய குருதி வெள்ளத்தின் பிரதி பலன். நாயைப் போல் அடித்துப் போடப் பட்ட தமிழர்களின் தன்மானப் போரின் விளைவு? என்பதையும் நாம் நமது நினைவிற்குக் கொண்டு வந்தே தீர வேண்டும்.

சென்னையில் தொண்டைமண்டலம் துளுவ வேளாளர் பள்ளியின் முன் தமிழர் பெரும்படையின் முன்னணி வீரர்கள், தமது இந்தி எதிர்ப்புப் போரை நடத்திக் கொண்டிருந்தனர்.

அவர்கள் செய்தது என்ன? "இந்தி ஒழிக" என வேகமாக "தமிழ் வாழ்க" என நிதானமாகக் கூறினர். பள்ளிக்குச் செல்லும் மாணவர்களைப் பார்த்து பணிவோடு, இரு கை கூப்பி, அன்புடன் "இந்தி படிக்காதீர்கள்" என்று கேட்டுக் கொண்டனர்.

இது குற்றம்? கொடுமையான குற்றம்!

இதற்காக இவர்களைப் போலீசார் லாரிகளில் ஏற்றிக் கொண்டு சென்னையி லிருந்து முப்பது அல்லது நாற்பது மைல்களுக்கு அப்பால் உள்ள காட்டுப் பாதைகளில், மொத்தமாக அல்ல, தனித்தனியே, அங்கொருவர் இங்கொருவராகத் தவிக்கவிட்டுத் திரும்பி வந்தனர்.

அது மட்டுமா? எட்டுமாத கர்ப்பவதி, எழில்நிறை தமிழ்ச்சி ஏகாதிபத்தியசர்க்காரின் அடக்கு-முறைக் கூட்டிலே அடைபட்டு யாருமற்ற அநாதைக் காட்டிலே, கையிலே பிடித்திருக்கும் பாலகன் பசி பசி என அழ, வயிற்றிலே சிசு துடிக்கத் துடிக்கத் தன்னந் தனியாக நகர் கடத்தப் பட்டாள்.

அந்த அம்மையாரைத் தேடித் திரிந்து திரும்ப அழைத்து வந்தனர் நமது தொண்டர்கள்; வீட்டிற்கு அல்ல, வைத்தியசாலைக்கு.

இயக்கத் தலைவர்கள் அனைவரும், நூற்றுக்கு மேற்பட்டவர்கள் சூழ்ந்து கொள்ளப்பட்டுச் சிறையில் தள்ளப் பட்டனர். தன்மானத் தமிழர்கள் தடியடி பட்டுத் தவித்தனர்.





இப்படிப்பட்ட கோரக் காட்சிகளை நம் மனக்கண் முன் சற்றுக் கொண்டு வந்து பாருங்கள். கட்டாய இந்தி ஒழிந்தது; தமிழ் வாழ்க என்ற வெற்றிக்களிப்பு பொங்கிட நாம் பட்ட கஷ்டங்கள் வேதனைகள் எவ்வளவு! சாமான்ய மல்ல; மிக மிக அதிகம்.

இந்தி எவ்வளவோ நாட்களுக்கு முன்பாகவே ஒழிந்திருக்க வேண்டியது. இன்று கிடைத்த வெற்றி முன்பே கிடைத்திருக்க வேண்டியது. தாமதமாகக் கிடைத் திருக்கிறது.

தாமதமாகக் கிடைத்திருக்கிறது என்றால் என்ன அர்த்தம், என்ன பொருள்?

மந்திரிகட்குத் தாமதமாக மதி பிறந்திருக்கிறது என்பதுதானே அர்த்தம்! உண்மையைத் தாமதமாக உணர்ந்தனர். தாமதமாக வேலை செய்யும் மூளை என்றுதானே பொருள்!

நாம் நடத்திய போராட்டம், மகத்தான போராட்டம். வரலாற்றிலே நல்ல இடம் பெற்றுள்ள போராட்டம். துரோகிகள் இல்லாது, துணிவுள்ள தீரர்கள் கொண்டதொரு போராட்டம், மொழிக்காக எதையும் தியாகம் செய்யத் திறன் படைத்த சிங்கத் தமிழர்கள் கொண்ட படை பலத்துடன் பலன் கண்ட போராட்டம்.

தமிழைக் கண்டு, தமிழரைக் கண்டு கேலி பேசிய வீணர்களைக் கண்டு பொங்கு தமிழர்க்கு இன்னல் விளைந்

தால் சங்காரம் நிச மெனச் சங்கே முழங்கு என வீர முழக்கம் விண்ணதிரக் கிளம்பிய போராட்டம்!

தமிழ் எங்கள் மூச்சு, தமிழ் எங்கள் பண்பு, தமிழ் எங்கள் இதய ஒலி, அதைப் பழிம்போர் துடிப்பர்; கேலி செய்வோர் கெட்டொழிவர், என்று வீரத்தோடு நடத்திய தீரப் போராட்டம், வெற்றிப் போராட்டம்.

இந்த போராட்ட வெற்றியைத் தொடர்ந்து இன்னும் பலப்பல சமுதாய அரசியல் போராட்டங்களை நாம் நடத்த வேண்டி யிருக்கிறது.

அறப் போரின் வெற்றி கிட்டியது. இன்னும் நடை பெறப்போகும் வேறு பல அறப் போருக்கு நாம் ஆயத்தப்பட வேண்டும். அதற்கு இந்த அறப்போரின் வெற்றி நமக்கு நல்லதொரு தூண்டு கோல்; மகிழ்ச்சி தரும் செய்தி.

இந்த அறப்போர் வெற்றியைக் கூட கேலி செய்திடுவர். உங்களுக்காகத் தான் மாற்றினேமா? கிடையாது. பாட திட்டங்களில் ஏதோ சில மாறுதல் செய்ய வேண்டுமென்று கருதினேம். மாற்றி யமைத்தோம் என்று மனப் பால் குடிப்பர்.

வேறு சிலர் தமிழ் விழாவிலே சர் சண்முகங்கள் செய்த சங்க நாதமும், மாஜி மந்திரிகள் செய்த முழக்கங்களுந்தான் இந்தக் கல்வித் திட்டத்தின் மாறுதலுக்குக் காரணம் என்றும் களித்திடலாம்.

ஆனல் யார் எதை நினைத்து மகிழ்ந்தாலும் தமிழ் நாட்டில் தமிழைக் காத்திட, தமிழைக் குலைத்திட வந்த





இந்தியை ஓட்ட எமது போர், மொழிப் போர், அறப் போர் தான் அடிப் படை; அடிப் பீடம் என்பது உறுதி.

எமது அறப் போரின் வேகம், இடையருது கொடுத்து வந்த விளக்கங்கள், சலியாத எங்கள் உழைப்பு, போராட்டம், ஆகிய சக்திகளின் விளைவே இந்த வெற்றி.

இதைத் தொடர்ந்து, இதை மனதில் இருத்தி வேறு பல வழிகளிலும் திட்டங்களிலும் வெற்றி பெற வழி வகுப்போம். வெற்றியும் பெறுவோம்.

இன்னும் நம்மை நோக்கிக் காங்கிரஸ் பிரசங்கிகளின் வாய்கள் திறந்தபடிதா னிருக்கின்றன என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

நாட்டின் நலனுக்கான நல்ல பிரசாரம் செய்து வரும் எங்களைத் திட்டித் தீர்ப்பதுதான் தோழர் C. P. சுப்பையாவுக்கும, த. நா. கா. க. தலைவர் காமராஜருக்கும் வேலை. ஓயாத வேலை. சின்னதுவும் சேர்ந்திருக்கிறது!

தோழர் சுப்பையா தாம் பேசும் கூட்டங்களில் ஜனங்கள் நடுவே கலந்து போகும் போது "பொறுங்கள், போகாதீர்கள். இப்பொழுது திராவிடக் கழகத்திற்கும், முன்னேற்றக் கழகத்திற்கும் பதில் சொல்லப் போகிறேன் என்று கூறிக்கூறி அதனாலேனும் தமது பேச்சைக் கேட்டிட ஆள் சேர்க்கிருராம்.

ஐயோ பாவம் பரிதாபம். அதைவிட அண்ணு வருவார், நெடுஞ்செழியன் பேசுவார், என்ருவது கூறிக் கூட்டம் சேர்க்கலாமே.

காமராஜர் இருக்கிருரே, அவருக்குத் திராவிடரைப் பற்றிய கண்ணும் கருத்தும், மிக மிக அதிகம்! எதற்கு? திட்டுவதற்குத் தான்.

அவர் எப்போதும், எங்கு சென்ருலும், எது பேசினுலும், அது குப்பை மேட்டுக் குண்டு பிள்ளையார் கும்பாபிஷேகமானுலும் சரி, ஊழியர் கூட்டமானுலும், சட்டசபைக் கூட்டமானுலும், சந்து பொந்துக் கூட்டம் ஆனுலும், பாட்டுக் கச்சேரியானுலும், பங்களாத் திறப்பு விழாவானுலும் எதுவானுல் என்ன? ஏன்? "யோக மங்களம்" நடனக் கச்சேரித் தலைமைப் பிரசங்கமானுலும் எதுவானுலும் அவர் நம்மை, திராவிடரை, திராவிடர் இயக்கங்களைத் தாக்கித்தான் பேசி வருவருகிருர், பேசுகிருர்.

எங்கும் ஆரம்பிக்கிருர், "மக்களே மயங்காதீர்கள். அந்தக் கருப்புச்சட்டை கம்யூனிஸ்டுகளிடம்." என்று!

எம்மையும் கம்யூனிஸ்ட் கிலியோடு சேர்த்துப் புலம்புகிருா மிரள்கிருர். ஏனே?

நாங்கள் ஒன்றும் பலாத்காரத்தில் இறங்கவில்லை. இறங்கிடத் திட்டமும் தீட்டிடவில்லை — பட்டமோ, பதவியோ, மந்திர தந்திர வேலைகளுக்கு அஸ்திவாரமோ போடவுங் காணேமே.





ஆனுலும் சதா "கருப்புச்சட்டை" ஸ்மரணம். காலையில் கோழி கூவும் நேரத்திலே எழுந்து, தோளிலே கலப்பை ஏந்தி வயல் வெளிச் சென்று, ஏர் பூட்டி, உழுது, உழைத்து உழைத்து மாலையில் மணி பத்து, என்று கடிகாரம் காலங் காட்டும் போது திரும்பிடும் உழவன் போல சதா உழைப்பு, தூற்றல் வேலை.

உழவனுவது சற்று அலுப்பால் கண்ணயர்வான். காமராஜரோ அப்படியும் இரார் என்றே எண்ண வேண்டி யிருக்கிறது, அவரது போக்கைக் காணும் போது.

ஒரு கணம் கற்பனை செய்து பார்ப்போம் காமராஜர் பிரம்மச்சாரி, கலியாணம் செய்து கொள்ளாமலிருப்பவர். அவர் அந்த விரதத்தை விட்டு, இல் வாழ்வை மேற்கொண்டு, தமது இளமனைவியோடு இரவு துயில் கிருர்.

நடுநிசியில் காமராஜர் உளறியடித்துக் கொண்டே, கட்டிலிருந்து கட்டாந்தரையில் உருண்டு விழ, அவர் தம் துணைவி 'என்ன நாதா, என்ன நாதா' என்று அலறி வினவ, அவர் "ஒன்றுமில்லை, அதோ, அதோ கறுப்புச் சட்டை, கறுப்புச்சட்டை" என்று வாய் குளற, "ஓகோ, கனவு கண்டீர்களோ! சே, கனவிலுமா கறுப்புச்சட்டைக் கிலி' என்று கேலி பேசிடும் நிலை வரலாம், நமது கற்பனைப்படி அவர் மணந்தால், ஒரு மாதை. அவ்வளவுக்கு அவரைப் பயமுறுத்தி விட்டதாகக் கிலி கொண்டுள்ளார்.

கிலியின் விளைவாக அவர் என்னவெல்லாமோ பேசுகிருர். திராவிட இயக்கத்தவரின் பத்திரிகைகள், கட்டிடங்கள், உள்ளங்கள் எங்கும் இலட்சுமிகாந்த னுடைய 'ஆவி' உலவுகிறது என்கிருர்.

உண்மையை ஊரறிய எடுத்துரைப்பது நேர்மையல்லவா? நாங்களென்ன அந்த நடையிலா எழுதுகிருேம்? பேசுகிருேம்? ஆர அமர யோசித்துப் பாருங்கள். காமராஜரே? உண்மை விளங்கும்.

எங்கே, எந்த வட்டாரத்திலே, எவரின் உள்ளத்திலே, இலட்சுமிகாந்த னுடைய 'ஆவி' உலவுகிறது என்பது விளங்கும் என்றுதான் கூறுகிருேம், பரிதாபத்தோடு.

அடுத்தபடி அவர் கனவு காண்கிருர். இந்த இயக்கத்தவர்களின் கட்டை விரலேகளை வெட்டிவிட வேண்டும் அப்போதுதான் இவர்களின் கொட்ட மடங்கும் என்று விசித்திரமான, ஆனல் மிகமிக வேடிக்கையான கனவு, அதோடு மிகவும் விபரீதமான துங்கூட.

எந்த வாயால் எம்மை 'இலட்சுமிகாந்த னுடைய ஆவி என்று அர்ச்சித்தாரோ' அதே நா தான், வாய் தான், 'கட்டை விரலே வெட்டு' என்று முழக்க மிடுகிறது.

கனவு காண்கிறது. யார்? அகிம்சையின் வழித்தோன்றல் அண்ணல் காந்தியின் வழி வந்தவர் என்று தம்மைக் கூறிக் கொள்பவர். எதற்கு?





உள்ளதை, உண்மையை, நாட்டு நடப்பை, நல்வழிப் பாதையை நாட்டு மக்களுக்குக் கோழைத்தனமின்றி கோபத்திற்கும் கொக்கரிப்புக்கும் அடிபணியாது, வீர முழக்கத்துடன் எழுதும் எழுத்தாளர்களைக் கண்டு!

விபரீதமான புத்தி, வேண்டாம் இந்த வீண் மனக்கோட்டை, தேவையற்ற திருப்பணி, நிறுத்துங்கள் காமராஜரே, நிறுத்துங்கள், இதோடு.

அப்படித்தான் அவர் ஆட்சிப் பலத்தினல் கட்டை விரல்களைப் போக்கி விட்டுமே; அதன் விளைவு என்னும், ஆகக்கூடும்? அவர் நினைப்பது போல, அவ்வளவு கோழைகளா, திராவிடர்கள்! திராவிட இயக்கத் தொண்டர்கள், எழுத்தாளர்கள்?

அவிழ்த்துவிட்ட நெல்லிக்காய் மூட்டைகள் அல்லவே அவர்கள். அவரின் வீண் வெத்து வேட்டைக் கண்டு விரண்டோட! அவர்கள் 'தன்மானச் சிங்கங்கள், தறுதலைகளல்ல, நெஞ்சுறுதி படைத்தவர்கள், நேர்மை வழி நிற்பவர்கள், அஞ்சா நெஞ்சன் வழி வந்தவர்கள் அவர்கள் ஓடார்; ஒளியார், என்பது திண்ணம்; உறுதி.

கட்டை விரல் போகட்டும். கலங்கிடும் காளைகள் அல்ல, விரல் போனல் வாய், பேச்சு, பிரசங்கம் இருக்கிறது. அதற்கும் வாய்ப்பூட்டு போடட்டும்; துணிவிருந்தால் முடியுமானல், அதிகார போதை, தாம் ஆட்டும் சுட்டுவிரல்படி நடக்கும் நிலைமையி லிருப்பதால்.

இன்றேல் குடந்தையில் அறிஞர் அண்ணு கூறியது போல இயக்கப் பேச்சாளர் அத்தனை பேருடைய நாக்குகள் அனைத்தையும் வேண்டுமானுல் துண்டித்து விடட்டும், துணிவிருந்தால்!

கரங்களை நறுக்கி, நாவினைத் துண்டித்து நிர்க்கதியாக விட்டாலும் எமது தன் மானம், இன முழக்கம், ஓயாது, ஒழியாது, அடங்காது, அடக்க முடியாது.

அப்போதும் பிரசாரம் செய்ய, பகுத்தறிவுக் கொள்கையைப் பரப்பும் பணி புரிய முடியும் எங்களால்.

நாடகங்கள், ஊமை நாடகங்கள் நாடெங்கம், பட்டி தொட்டி எங்கும் நடத்திக் காட்டுவோம். முடியுமா? நடக்கக் கூடியதா? நடத்தத்தான் முடியுமா? என ஐயுற வேண்டாம்.

"அமைதி" என்ற நாடகம், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் தீட்டிய சிறுநாடகம் பார்த்திருப்பாரோ அன்றி கேட்டாவது இருப்பாரோ, நானறியேன், நமது காமராஜர், ஆனுல் நாடு அறியும், 'அமைதி' நாடகத்தை!

நடிப்புதான். அதிலும், பேச்சற்ற பாட்டற்ற, அமைதியான நடிப்புத்தான். அதிலே உண்டு கருத்து. கவின் மிக்க கருத்து வழிந்தோடுகிறது அதிலே காணட்டும் இனியாவது காமராஜரின் கண்கள்!

அவரது போக்கால் எம்மைப் பயமுறுத்தவோ அல்லது பொது மக்களை ஏய்த்துத் திருப்பவோ முடியாது என்பதையும் உணரட்டும்!





நமது கொள்கை நாட்டுக்குத் தேவையானது, உண்மையானது, உரிமை வேண்டுவது; உரிமைப் போராட்டம், அமைதியாக, ஆனுல் அழுத்தந்திருத்தமாக என்பதைக் காமராஜர்கள் உணர வேண்டும்.

நாம் அமைதியாக முன்னேறிக்கொண்டு வருகிறோம். நாம் திராவிடர். நமது கலாச்சாரம், திராவிடக் கலாச்சாரம். நாம் நல்ல முறையிலே வாழ்ந்தோம்; ஆனுல் வீழ்ந்தோம் இடையில், எத்தர்களின் ஏமாளித் தனமான கோமாளிக் கூத்திற்கெல்லாம் கட்டுப்பட்டதால்.

உலகாண்டோம் புகழ் ஏணியின் மூலம்; உதவாக் கரைகளென ஆக்கப்பட்டோம் நடுவே; உலுத்தர்களின் உண்மைக்கு மாறுன கற்பனைக் கோட்டைகளைக் கண்டு மயங்கியதால், மனம் மாறியதால்.

அப்பட்டிப்பட்ட நாம், நம்மை உணர்ந்து, நாம் யார்? எந்தவழி வந்தோர், எவரால், எதனுல் எப்படியெப்படி யெல்லாம், கயவர்களால், ஆஷாடபூதிகளால், அறிவிழந்தோம் என உணர்ந்தோம். உணர்ந்து அதனை ஊருக் கெடுத்து உரைக்கின்றேம்.

உண்மை உணருங்கள், ஊராண்ட இனம் உதாசினப்படுத்தப்படுவதைப் பாரீர். சக்திபுள்ள இனம் சனுதனச் சேற்றில் அமிழ்ந்து கிடப்பதைக் காணீர்! அதிலிருந்து கரையேறி, மனிதர்களாய், மாவீரர்களாய், முன்னேர் பெற்ற சீரும் சிறப்பும் பெற்று வாழ வழி வகுப்போம், வாருங்கள், வாருங்கள், வாருங்கள் என்று

வாலிபரை அறைகூவி அழைக்கின்றோம். வருங்காலத்தி லாவது, நாம் வாழ, நமது இனம் சீர்படத் தக்கதோர் மார்க்கம் தேட.

நாம் இத்தகைய பிரசாரத்திலே சென்றுகொண் டிருக்கிறோம். இதே நேரத்தில், நமது இனத்தைச் சேர்ந் தவர்களே, சனாதனச் சாக்கடையில் நுழைந்து, அதி லிருந்து மீளாமல், மீளவும் விரும்பாமல், வழியும் தெரி யாமல், வழி வகுத்துத் தரும் நம் பாதையையும் பின் பற்றாது, வழியைப் பின்பற்றாதது மட்டுமல்ல, வழி யையே மறிக்கின்றனர். வழியை மறிப்பது மட்டுமல்ல, வழியே தவறு, தேவை யற்றது. "போகாத ஊருக்குத் தான் அந்த வழி" என்றெல்லாம், பேசியும், ஏசியும், எழுதியும், இழித்தும் பழித்தும் வருகின்றனர்.

அவர்கள் நமது அடிப்பீடத்தையே ஆட்டங் கொடுக்கும்படிச் செய்யத் திட்ட மிடுகின்றனர். "ஆரிய ராவது திராவிடராவது" அதெல்லாம் ஏது? எங்கே என்று பிதவிக் குருடரைப்போல் கூக்குரலிடுகின்றனர். ஆராய்ச்சியைத் துணைக்கழைக்கின்றனர். அரை குறை வாதங்களைப் பேசுகின்றனர்.

நாமக்கல்லார் நாமாவளி பாடுகிறார். 'ஆரியராவது திராவிடராவது' ஏதும் இல்லை. யாவரும் தமிழர்கள். தமிழ் நாட்டில், தமிழ பேசுபவர்கள் அத்தனை பேரும் தமிழர்களே. எல்லோரும் இரண்டறக் கலந்து விட்ட னர் என்று.





தமிழ் பேசுபவர் அத்தனை பேரும் தமிழர்களா? தமிழர்கள் என்று ஒப்ப முடியுமா? ஒப்பினால் தமிழர் களாய்த், தமிழ் இனத்தவராய், தமிழ்ப் பண்பாடுடைய வராய்த் திகழ முடியுமா? திகழத்தான் செய்கிறார்களா? — செய்யவாவது முயற்சி யுண்டா? மனமாவது உண்டா? இருக்கிறதா? ஏற்பட்டதா? ஏற்படுமா? ஏற் பட ஏது, வழி, வகை வகுத்ததுண்டா? நாமக்கல்ல ராவது? இல்லையே, ஏன்?

ஆங்கில நாட்டிலே, ஜெர்மனி பேசி அங்கு குடி யிருந்தால் ஆங்கிலனாகிவிட முடியுமா? தெலுங்கு பேசும் பிரதேசத்தில், பிரஞ்சுக்காரன் குடியேறி, தெலுங்கிலே பண்டிதர் ஆனாலும், தென்னாட்டு இனத்தான் ஆகிவிட முடியுமா?

அமெரிக்கர், இத்தாலி பேசுவதால் மட்டுமே இத்தாலியார் ஆக முடியாதே! தமிழ் நாட்டில் தமிழ்ப் பண்டிதர் ஆனாலும், மார்வாடி, குஜராத்திகள், தமி ழினத்தவர், பண்பாடு பெற்றவர்கள், தமிழ் இனம் என்று ஒப்பமுடியுமா?

மொழி வேறு, இனம் வேறு. மொழியால் மட் டுமே இனப்பிரிவு ஏற்படுமா? ஏற்படுகிறதா? ஏற்பட் டுள்ளதா? கூறட்டும் அவர்தான். நெஞ்சில் கை வைத்து நேர்மையைத் துணைக்கழைத்து, வாய்மையின் பால் நாட்டங்கொண்டு! முடியாதே!

ஏன் முடியாது? இனம் வேறு. மொழி வேறு. பல மொழி பேசும் பல பிரிவினர் சேர்ந்து ஒரு இனமாக

இருப்பதைக் காண்கிறேமே தவிர, கேட்கிறேமே தவிர, படிக்கிறேமே தவிர, ஒரு மொழி பேசினல் அது ஒரு இனம்; வேறு ஒரு மொழி பேசினல் அது வேறு இனம் என்று காணவில்லை, காணவும் முடியாது. வாதத்திற்காகவே இதை ஒப்புக்கொண்டாலும் எடுபடாதே, நிலைக்காதே?

அப்படியானல் எல்லோரும் இந்தியர் என்ற அவரது கற்பனைக் கோட்டையே தகர்ந்து சுக்கு நூருகி விடுகிறதே!

மொழியால் இனம் ஒன்றுபடும் என்றல் எப்படி? ஒன்றுபட்டு விடுமா? தமிழ் பேசுவதால், தமிழ் நாட்டில் வசிப்பதால் மார்வாடி மாறிவிட்டானு? இல்லையே. அவர்கள் கலாச்சாரம், பழக்க வழக்கங்கள், பண்பு வேறு. தமிழர் பண்பு வேறு.

திராவிடருக்கு மட்டுமென்ன? ஒரேஒரு மொழியா? திராவிட மொழிகள் என, தமிழ், தெலுங்கு, துளுவம், மலையாளம் என உண்டல்லவா? இது எதைக் குறிக்கிறது. மொழி மட்டும் இனத்தைக் குறிப்பிட, காட்ட முடியாது என்பதைத்தானே!

ஆரியம் வேறு, திராவிடம் வேறு; இனம் வேறு. வேறு! கலையால், கலாச்சாரத்தால், பண்பால், பழக்க வழக்கத்தால், ஏன் நடைமுறையில்கூட வேறு வேருகத் தான் இருக்கிறது.

இதற்கு நாங்கள் எத்தனை யெத்தனை சரிதச் சான்றுகள், வரலாற்று வல்லுநர்களின் ஏடுகளின் முடிபுகள்,





மற்றும் நடைமுறைச் சான்றுகள் பலவும், பல முறையும் எடுத்துக்காட்டி வருகிறேம்.

அதை மறுக்காது, ஏதோ "ஆரியராவது, திராவிடராவது" என்று ஆலாபனம் செய்து விடுகிருர், பரிதாபத்துக்குரியவர். இன்னும் சற்றுத் தெளிவோடு சிந்திக்கட்டும் சிந்தித்து உண்மையை உணரட்டும்.

நாமக்கல்லார், இவைகளை விட்டு விட்டுத் தமது புலமையிலே ஊக்கம் செலுத்தினல் இதைவிட நல்ல பலன் காணலாம். அவர் இத்தகைய ஆவேசத்தி லீடுபட்டுத் தவருன உவமைகளைப் புகுத்துகிருர் அவரது நூல்களில்.

ஒரு புத்தகத்தில் அவர் ஒரு அழகான பெண்ணின் கண்களை வர்ணிக்க ஆரம்பிக்கிருர். அதற்கு அதிக ஆயாசமோ, அகராதியைப் புரட்ட வேண்டிய அவசியமோ தேவையில்லை.

சாதாரணமாகவே அந்த அழகியின் கண்கள் ஆயிரம் சந்திரர்களைப் போன்று இருந்தது, மின்னலென் ஒளி பரப்பியது, அல்லி மலர், முல்லைச் சிரிப்பு இன்னும் எவ்வளவோ கூறலாம், கூறியிருக்கலாம்.

ஆனல் அவரது புதிய அகராதிப்படி அவர் கூறுகிருர், ஒப்பிடுகிருர், அழகியின் கண்கள் 'ரயிலில் மெயிலில், ராத்திரி வண்டி இரண்டு விளக்குகளுக்கு!

என்ன ஆச்சரியம், அதிசயம். ராத்திரி ரயிலில் மெயிலில் இரண்டு விளக்குகள் உண்டா? இருக்கிறதா?

கேள்விப் பட்டதுண்டா? முன் ஒன்று வெண்ணிற ஒளி வீசும் விளக்கு. பின்னல் ஒரு சிவப்பு நிற ஒளி வீசும் விளக்கைத்தான் பார்க்கிறோம்.

ஆனால் இரண்டு விளக்குகளைக் காணவில்லை, கண்டதுமில்லை அத்தனை பெரிய கண்களா? அணையாத ஜோதியா? ரயில் விளக்குகள்? ஒரு கண் ஒரு நிற ஒளி, மற்றது மற்றொரு நிற ஒளி வீசுவதா, பெண்ணின் கண்கள்!

அவரைக் குறை கூறவில்லை. கவனிக்க வேண்டும். அத்துறையிலே, பலன் தரும் பணியில் ஈடுபடட்டும் என்பதால்.

'குறுகிய மனப்பான்மை யுடையவர் நாம் என்பது மற்றொரு குற்றச் சாட்டு.

யார் குறுகிய மதி படைத்தவர்கள். வந்தவனுக்கெல்லாம் வாழ இடமளித்து, தான் வாழ வழியின்றித் திகைக்கும் தமிழரா? தமிழரை ஏய்த்துப் பிழைக்கும் [illegible]ரா? யாருக்குக் குறுகியமதி?

யாரை வாழக்கூடாது? ஓட்டவேண்டும், நாட்டை விட்டு எனக் கொக்கரித்தோம்? இல்லையே!

யாரையும் வாழக்கூடாது, வாழ விடக்கூடாது என்பதல்ல எமது குறிக்கோள். 'வாழ்க்கை வாழ்வதற்கே, வாழப் பிறந்தோம், வாழ வேண்டும், வாழ்ந்தே தீருவோம்' என்பதே எமது 'முரசொலி' அதுதான் இன முழக்கம்.





இனமுழக்கம், ஒரு இனத்தை வாழவிட்டு, வாழ வைத்து, வேறு ஒரு இனத்தை வகையற்றதாக்கி, வயிற்றுக்கில்லாமல் வாடவிடுவதற்கல்ல.

வாழ வேண்டும் நாமும் பிறரும். எல்லோரும் வாழ வேண்டும். ஒன்று போல், ஓர் குலமாய், உழைத்து, கஷ்டப்பட்டு, பிறரைச் சுரண்டாது, பிறர் உழைப்பைப் பறிக்காது, பிறர் உழைப்பை உறிஞ்சாது என்பதுதான் இனமுழக்கம்.

இதற்குத் தடையாகக் கலையோ, காவியமோ, பழக்க வழக்கமோ, பண்போ, ஆசார அனுஷ்டானமோ ஏன்? ஆண்டவனே குறுக்கிட்டாலும் அஞ்சாது பணியாற்றுவோம்!

திராவிட இனம், தன்மானங்கொண்டு, விழிப்புற்று வாழ விரும்புகிறது. தன்னை தாழ்த்தியவற்றை, கீழ் நிலையில் தள்ளும் எதையும் ஏற்காது. அதன் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை போடும் மூட நம்பிக்கைகளை முறியடித்தே தீரும்.

எங்கள் இனத்தை ஏய்த்து, மடைமைக்குள்ளாக்கி மந்த மதியினராக்கி, உழைப்பாளிகளாக்கி அதனால் ஆடாது அசையாது பலன் பெற்று வாழும் கூட்டம். இனம் எதுவானாலும், ஆரியமானாலும், ஆங்கிலமானாலும், வடவர் ஆனாலும் அதைப் பொறுத்திடோம், அவர்கள் எங்கள் உரிமையைப் பறிப்பது கூடாது,

எங்களைப் போல் வாழவேண்டும். எங்கள் இனத்தவர் கீழ் நிலையிலிருந்து முன்னேற முட்டுக் கட்டையா

யிருத்தல் ஆகாது, முடியாது, நடக்காது. அவர்களும் எம்போல் உழைத்து வாழ வேண்டும். எமக்கு இது வரை, பல வழிகளிலும் பின் தங்கி யிருக்கும் பாமரர்க்கு வழிவிட்டு, முதலிடம் தந்து, அவர்கள் நிலைக்கு யாவரையும் உயர்த்த வேண்டும். அதுவரை அவர்கள் பெற்றுள்ள வாழ்க்கை வளம், அடையும் இன்பம் சற்று குறைந்தாலும் பிறர் வாழ நாமும் வாழ வேண்டும் என்ற மனப் பண்பை, மனிதப் பண்பை மனதில் வைத்து, இடந்தர வேண்டும். அதுவே முறை, நீதி, நேர்மை. இதை அவர்கள் மறக்கக் கூடாது, மறக்க முடியாததுங் கூட.

நம்மினத்தவர் கடவுள், மத மூட நம்பிக்கைகளில் மூழ்கி மந்தப்புத்திக்காரர்க ளாகின்றனர்.

நாம் கூறுகிறோம். கடவுள் எங்கும் இருக்கிறார் அவர் ஒருவர். அன்பு நிறைந்தவர். அவருக்கு உருவமில்லை, உடுக்கத் துணி, இருக்க இடம், பக்கத்திலே மனைவியர், பட்டு மெத்தையுடன் கூடிய பள்ளியறை, அதில் அவரை இரவில் படுக்க வைத்துக் காலையில் எடுத்துவிடப் பூசாரியும் தேவையில்லை என்று.

அது மட்டுமா? கடவுள் கல்நெஞ்சரல்ல. அவர் உலகைப் படைத்து உனக்கு அறிவையும் தந்தார். உனக்குக் கடவுளைக் காட்ட இடையே ஆள் தேவையில்லை. கடவுளைக் காப்பாற்ற, அவருக்குக் கலியாணம் கருமாதி செய்ய நீ கவலைப்படாதே! கடமையைச் செய், காசை வீணுக்காதே கடவுள் பேரால் என்று.





அது மட்டுமா? நாம் கூறுகிறோம். கடவுளர்க்கு முன் மக்கள் யாவரும் சமம். பிறப்பிலே பேதமில்லை. சாதி பேதம் ஒழி. சமமாய் மதி. எவரையும் தொட்டால் தீட்டு என எட்டி ஓடாதே. உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று ஏசிப் பேசாதே, கடவுளைக் காட்டி மயக்கு மொழி பேசும் கடவுள் தரகர்கள் வலையில் சிக்கிச் சீரழியாதே என்று.

அது மட்டுமா நாம் கூறுகிறோம்; கூறி வருகிறோம். கல்லிலும் செம்பிலும் கடவுள் இல்லை, மனத்தூய்மையிலே, வாய்மையிலே, எல்லாவற்றிற்கும் மேலாக, மனிதாபிமானத்திலே, மனிதப் பண்பிலேதான் கடவுள் இருக்கிறார் என்று!

அதுமட்டுமா, நாம் சொல்லுகிறோம்! கடவுளுக்கென்று கோட்டை போன்ற இடங்களைக் கோவிலென்று கட்டுவதைவிட கடவுள் பெயரால் கலாசாலைகள் கட்டிக், கல்வி நீரோடையை நாடெங்கும் பாய்ச்சுதலே கடவுள் தொண்டு, கடமையுங்கூட என்கிறோம்.

கடவுள் கடவுள் எனக் காசைக் கரியாக்கி, அவருக்கு முத்துச் சிவிகையும், வைர முடியும், பச்சை மூக்குத்தியும், வாகன வகையறுக்களும் செய்யாதே. சிந்தி?

இதுவா, கடவுளுக்குக் காணிக்கை செலுத்தும் வழி. தேவைதானு, எல்லாம் வல்ல எம்பெருமானுக்கு என்றுதான் கேட்கிறோம். 'கடவுளைக் காக்கவென்று நீ கவலை கொள்ளாதே, கடமையைச் செய்' என்று முழக்க மிட்டோம். ஏன்?

கடவுள் உலகையும் உன்னையும் படைத்துக் காப்பவர், அவரைக் காப்பது உன் அறிவீனம், அசட்டுக் கொள்கை யல்லவா, யோசித்துப் பார்!

கடவுளுக்குக் கோயில்கட்டி, விக்கிரகங்கள் ஏற்படுத்தி வித விதமான மண்டபங்கள் கட்டி, அழகழகான ஆடைகளையும், பட்டுப் பீதாம்பரங்களைப் போர்த்தி, பொன், வெள்ளி, வைரம், மாணிக்கம் போன்ற விலை யுயர்ந்த ஆபரணங்களால் அவர்களை அலங்கரித்து அதைக் கண்டு களித்து, வணங்கி ஆடல் பாடல் புரிகிறாயே, கேள். அந்த அணிகளையும் மணிகளையும் எவ்வளவு பத்திரமாகப் பந்தோபஸ்தாகப் பாதுகாக்கவேண்டி யிருக்கிறது? ஏன்?

யாராவது கள்ளன் அவைகளை "அவரன்றி ஓரணுவும் அசையாது" என்று நீ பாடி, ஏத்தியேத்தித் தொழுத ஆண்டவனின் ஆலயத்துள்ளே, அர்த்தராத்திரி வேளையிலே, ஆளரவமின்றி, அனைவர் கட்டுக் காவலையும் மீறி, ஆண்டவன் அணிந்துள்ள, உன்னால் அணிவித்து அலங்கரிக்கப்பட்டுள்ள, ஆடை ஆபரணங்களைச் கொள்ளை கொண்டு போவான், என்பதனால் தானே!

ஏனப்ப உனக்கு அந்தப் பயம்? எதற்காக வரவேண்டும். எல்லாம் வல்ல எம்பெருமானுக்கு எல்லாவற்றையும் பூட்டிவிட்டு ஏன் அவதிப் படுகிறாய் அது கொள்ளை போய்விடுமே என்று.





'என்ன இருந்தாலும், திருடர் பயம் இல்லாமல் போகுமா? பாவிகள் இருக்கிறார்கள் உலகில், எதற்கும் துணிந்தவர்கள், எம்பெருமான் உடமையானாலும் எடுத்துப்போய் விடுவார்கள்' என்பார்.

அந்தப் 'பாவிகள்' யார்? பரமன் படைப்பு தானே அவர்களும். ஏன் பாவிகளைப் படைத்தார். உன்னையும் படைத்தார். அணிகள் பல அவருக்குப் பூட்டி அழகு பார்த்திடும் மதி படைத்தார் உன்னிடம்; அதனால் உனக்கேன் இந்தக் கிலி ஏற்படச் செய்தார் என்று சிந்தித்துப் பார்.

பரமனால் படைக்கப்பட்ட மனிதன் பரமனுடைய ஆடை அணிகளையே அபகரிக்கத் துணிகிறான். அதனால் அவனுக்கு ஏற்படும் அப கீர்த்தியையும் அலட்சியப் படுத்திக் கொண்டு?

பரமன் பாவத்திற்குப் பலனாக படு நரகிலன்றோ தள்ளுவார் அவனை? அதை ஏன் அவன் யோசிக்கவில்லை? ஏன் திருடுகிறான், திருடத் துணிகிறான் அதிலும் பரமன் பொருளையே பாதி ராத்திரி வேளையிலே, என்று யோசி; ஆற அமரத் தீவிரமாக யோசி; யோசித்துப் பார்,

'வயிற்றுக்கு இல்லாதவன் திருடுகிறான்' இது தானே சாதாரணமாகக் கிடைக்கும் விடை! திருடுவதைத் தொழிலாகக் கொள்வதேன்? அது அவனுக்கென்ன பொழுது போக்கா? கண்ணாமூச்சி விளையாட்டா? ஏன் திருடனாகத் துணிகிறான்? இதைவிட

'திருடும் துணிவு' திருடும் நிலை அவனுக்கு மட்டும் எப்படி வந்தது. ஏன்? ஏன்?

திருடுகிறான், பசியால், வயிற்றுக் கில்லாததால். தன் மனைவி மக்களைப் பேண வசதி இன்மையால் திருடுகிறான் வாழ வகையற்றதால் கள்ளத்தனம் புரிகிறான் கதியற்றவன் ஆனதால். ஏன்? இந்த நிலைக்கு ஆளானான். ஆளாக்கப்பட்டதன் காரணமென்ன?

கள்ளன்; காதகன்; இரக்கமென்ற ஒரு பொருளிலா அரக்கன், மாபாதகன், சமூகத் துரோகி, கொடுமைக்காரன், வஞ்சகன், பாதகன், படுமோசக்காரன், பஞ்சமாபாதகன், வாழமுடியாதவன், வகைகெட்ட சோம்பேறி, வக்கிரம், சோதா, போக்கிரி, திருடன்! திருடன்! திருடன்; என்றெல்லாம்பிறரால், சமூகத்தில் ஏசப்படுவான் என்பது தெரியாதா? தெரிந்தும் ஏன் கள்ளனாகிறான்? திருடத் துணிகிறான்.

பிடிபட்டால் அடி உதை, குத்து கிடைக்காதா? கிடைக்குமென்பதும் தெரியாதா? சிறைத் தண்டனை சாமான்யமா? அதுவும் திருடும் கள்ளனுக்கு? தெரிந்தும் ஏன் செய்கிறான், செய்யத் தூண்டும் நிலையைப் பெறுகிறான்? சிந்தித்துப்பார்.

எவ்வளவோ இழிநிலை, கீழ்மைத்தனம் மக்களிடையே மாபாவி பட்டம், ஊரிலே நல்லபடி நடமாட முடியாத நாச நிலை! இத்தனையும் தெரியும் அவனுக்கு? தெரிந்தும் பலன்? திருடுகிறானே! அதைவிடப் பிச்சையாவது எடுத்து வயிறு வளர்க்கலாமே! என்றுதான் பரி





தாபப்படுகின்றனர் பலர். ஆனால் அவன் இவ்வளவு இடையூறுகள். இழிமொழிகள், பொல்லாங்குகள் வரும் என்று தெரிந்தும், ஏன் திருடத் துணிகிறான் என்பதுதான் நமது கேள்வி.

திருடன், கள்ளன், சமுதாயத்திலே ஒரு பெரிய, கொடுமையான பட்டம், அவன் ஊரால் வெறுக்கப்படுகிறான், ஒதுக்கப்படுகிறான்.

அவனுக்கு உலகில், மக்களிடையே வாழ, பிறர் போல் நடமாட, நன்மதிப்போ, நாணயமோ கிடையாது. கிடைக்காது, கிடைக்கவும் முடியாது ஆனால் அவன் திருடும் நிலைக்கே மீண்டும் தள்ளப்படுகிறான் சூழ்நிலையால்.

அவன் வாழமுடியாதவன்; வேலை ஏதும் கிடைக்கவில்லை. விட்டிலே அனைவரும் பட்டினிச் சாவை நெருங்கிவிட்டனர். குழந்தைக்கோ காய்ச்சல். கையில் காசில்லை, கடன் கொடுப்பார் யாருமில்லை; என்ன செய்வான்; துணிகிறான் திருட. கள்ளன் என்று [illegible]ட்டு சிறைக்கூடம் போகும் நிலை வருகிறது, அவனுக்கு.

பிச்சை கேட்டாலும், போடுவார் எத்தனை பேர். எத்தனை பேருக்குக் காணும் பிச்சைக்காசு, அதுவும் எத்தனை நாளைக்குச் செல்லும்?

இப்படிப்பட்ட நிலை பயங்கரச் சூழ்நிலை, அவனிடமுள்ள மனிதத் தன்மையையே போக்கடித்து மிருகமாக்கிவிடுகிறது. அப்போது எம்பெருமான் பொருளா

னாலும் பரவாயில்லை பக்தன் பசிதீர உதவட்டும் என்று கூட நினைத்திடும் அளவுக்கு மன நிலை மாறுகிறது. இதுபோல் இன்னும் எத்தனையோ நிலை, மனிதப் பண்பை இழந்திடச் செய்யும் சூழ்நிலை மனிதனை ஆட்டிப் படைக்கிறது!

பரமனிடம் சென்று பொருளைத் திருடியோடும் போது பரமன் 'பாதகா நில்' 'பிடி சாபம்' என்று தடுத்துத் தண்டனை தந்ததாக நாம் எங்கும் கண்டதுமில்லை. கேட்டதுமில்லை. மைந்தன் பிழைக்கட்டும் என்று தான் வாளாயிருந்துவிட்டார் போலும்.

எத்தனை யெத்தனை இடங்களிலே தனம் இழந்த தயாபரர்களும், தாலி யிழந்த அம்மையும் உள்ளனர். கோயில்களிலே!

ஆலயங்கட்டி, அணி பணி பூட்டி அழகு பார்த்து, அதைத் திருடர் அபகரித்து ஓட அதைக்கண்டு பக்தர்கள் பதறிப் புதுப் புது அணிகள் செய்து மறுமுறை பூட்டிடக் காண்கிறோம், அதைக் காணும்போது, கேட்கும் போது நாம் கற்கும் பாடந்தான் என்ன ?

கல்லையும் செம்பையும் கடவுளாகக் கற்பித்துக் கொண்டு, காசைக் கரைப்பதைவிட, ஏழை, எளியவர் வாழத் தெரியாதவர், வாழமுடியாதவர்களுக்கு. வகை வழி செய்வதே நற்பணி, நல்ல தொண்டு, என்பது தான்.

கடவுளின் காதணி காணமற்போய் விட்டது. அம்மையின் தாலியைக் கள்ளன் கழற்றிக்கொண்டு போய்





விட்டான் என்றெல்லாம் செய்திகள் பத்திரிகைகளில் வருவது எவ்வளவு அருவருப்பாக இருக்கிறது.

ஆண்டவன் ஆலயத்திலே பிரகாசிக்கும் மணிகள் மறைகின்றன. எவ்வளவு துணிச்சல் அதைச் செய்தவனுக்கு! என்று ஏசிடும்போதே, அத்தகைய நிலை ஏற்படாது தடுத்தல் வேண்டும் என்ற எண்ணமும் ஏற்படவேண்டும்.

எம் பெருமான் எப்படி இதைப் பார்த்துக்கொண்டிருந்தார். கொள்ளையிடும் வரை என்ன செய்துகொண்டிருந்தார். ஏன் அவனுடைய கை துண்டிக்கப்பட்டிருக்கக்கூடாது. நாக்கு உள்ளே போயிருக்கக் கூடாது? ஏன் நடக்கவில்லை இதெல்லாம்? என்று கேட்பது நாத்திகமாகப் படலாம் சிலருக்கு?

இது நாத்திகமல்ல. நல்லறிவுக் கேள்வி. நாட்டிலே கிளம்பும் கேள்வி. பரமன், எல்லாம் வல்ல எம்பெருமான் படைப்பிலே இப்படி ஒரு பாபாத்மா இருப்பதா பிறப்பதா? இப்படிப்பட்ட திருவிளையாடல் செய்வார், அன்புருவான ஆண்டவன்; கருணைவள்ளலான கடவுள் என்று எண்ணுவது, எண்ணம் ஏற்படுவதே தவறு?

இதைக் காணும் நாம் கூசாமல் கூறுகிறோம். இது ஆண்டவனல்ல. ஆண்டவன் என்ற கற்பனைச் சிலை என்றுதான் கூறுகிறோம். இதனை நம்பாதீர் நம்பி, மூட நம்பிக்கை கொள்ளாதீர். நல்லறிவுப்படி நடவுங்கள் என்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

என்னைப் போன்றவர்கள், காய்ச்சலால் கஷ்டப் பட்டால் 'கடவுள் காட்டுகிறார் கைவரிசையை' என்பது. வேறு சிலர் காச நோயால் கஷ்டப்பட்டால் 'நாத்திக னல்லவா? நன்றாய்ப் படுத்துகிறார் ஆண்டவன்;' என்ற கேலிப் பேச்சு.

நாட்டிலே நல்லறிவுப்பணி புரிவோருக்கு, ஒரு சிறு நோய்; துன்பம் வரினும், வைதிக புரி அதற்கு என்ன வெல்லாமோ காரணங் கற்பித்துக் கதை கட்டு கிறது. ஆனால் சில நாட்களுக்குமுன் சபரிமலை ஐயப்பர் என்னவானார்.

அவரது ஆலயம் எவரோ சிலரால் தவிடுபொடி யானதே! ஏன் ஐயப்பர் தம்மைத் தாம் காப்பாற்றிக் கொள்ளக் கூடாது? அவரது பரிவாரங்கள் படுத்துறங் கினவா? அவரது போர் வீரர்கள் எங்கே? ஏன் கொள் ளைக் கூட்டம் கூண்டோடு தப்பித்துக் கொண்டது.

இந்தக் கொடுமை நடந்தது ஆண்டவனுக்கே. இதென்ன காரணம்? கல்லா? கடவுளா? எண்ணத் தோன்றுதா? கற்பனை செய்யப்பட்ட கடவுள், கல்லூரு விலே மனிதனால் படைக்கப்பட்டவர் என்ற நினைப்பு வராதா?

இந்த நிகழ்ச்சியை மறைக்க அந்தக் கோவில் தர்ம கர்த்தா ஒரு நல்ல கதை கட்டி விட்டார்.

அதாவது அவர் இடித்த இடங்களைப் பார்வை யிட்டு வரும்போது சுமார் பன்னிரண்டு அடி நீளமுள்ள





பாம்பு வந்ததென்று 'சரணம், ஐயப்பா, போய்விடப்பா' என்றவுடன் அது போய்விட்டது என்பதாகும்.

இதை எல்லாப் பத்திரிகைகளும் ஐந்து காலங் கட் டிக் கொட்டை எழுத்துக்களில் பிரசுரித்தனர். மக்கள் ஐயப்பன் கோவில் இடிந்த மயக்கம் போய் அவர் பெருமை பற்றிப் பேச, புகழத் தொடங்கினர்.

சில தினங்களில் திருவாங்கூர் முதன் மந்திரி மேற் படி "பாம்பு" செய்தியை மறுத்தார். அப்படி யொன் றும் நடக்கவில்லை எனப் பகிரங்க அறிக்கை விடுத்தார்.

இதுவும் பத்திரிகைகளில் வந்திருக்கிறது. ஆனால் வந்த விதம் வேறு; எங்கோ ஒரு மூலையில் சிறு எழுத் துக்களில்! என்ன பத்திரிகா தர்மம்!

கொட்டை எழுத்துக்களில் போட்டுப் பிரபலப் படுத்திய ஒரு செய்தி, தவறு, உண்மைக்கு மாறானது, என்று முதன் மந்திரி அறிக்கை விடுகிறார். பத்திரிகை கள் என்ன செய்ய வேண்டும், செய்திருக்க வேண்டும்?

இதனையும் பெரிய அளவில் போட்டு, 'முன் வந்த செய்தி தவறு. அதை நம்ப வேண்டாம்' என்று ஒரு சிறு குறிப்பாவது எழுதியிருக்க வேண்டாமா? 'உம், கிடையாதே. பலர் இன்னும் 'பாம்பு'ச் செய்தியில் பர வசப்பட்டுக் கிடப்பாரே, மூட பக்தி கொள்வரே, இன் னும் சிலர்! இந்த நிலை, முறை, மாற நாங்கள் பேசுவது தவறா? எடுத்துக் காட்டுவது குற்றமா?

இதே போல இன்னொரு செய்தி 'பகவான்(!) ரமண ரிஷி' இறந்தார் அவர் ஆத்மா பிரிந்தபோது வானத்தில் ஒரு அகண்ட ஜோதி தோன்றி மறைந்தது, என்று ஒரு செய்தி வந்தது.

பகவான் ரமணரிஷி யார்? ஊருக்கு உபதேசி, ஞானி, அவர் இறந்தார்? எப்படி? சாதாரணமாகவா? அன்றி தீயில் குளித்தா? பூமியில் சமாதி கொண்டா? இல்லை. பின் எப்படி?

மாண்டார், பலநாள் உடல் நலமின்றி வருந்தினர், பற்பல டாக்டர்கள், பிரபல டாக்டர்கள் பார்த்தும் குண மடையாது மாண்டார்.

என்ன நோய் புற்று நோய்! என்ன ஆச்சரியப் படுகிறீர்கள்! பகவான், பாவிகளுக்குக் கூட வராத, வரக் கூடாத புற்று நோயால் பல நாள் நொந்து, வாடி, வதங்கி, பிரபல வைத்தியர்களால் பயனில்லை எனக் கை விடப்பட்டுத்தான், கடைசியில் மாண்டார்.

அவர் மறைந்தபோது தான், ஆகாயத்திலே அகண்ட ஜோதி தோன்றி மறைந்ததாம். நல்ல விசித்திரம்!

உலக உத்தமர், ஊருக்கு உழைத்தவர், விடுதலைப் போராட்டத்திலே விறுவிறுப்பூட்டிய வீரர், நவகாளி யாத்திரை செய்தவர், பொதுநலத் தொண்டர், அடிக்கடி உண்ணு விரதம் இருந்தவர், அவ்வப்போது அந்தராத்மாவோடு பேசிக்கொண்டிருந்தவர் வஞ்சகனின் குண்டு பட்டு மாண்ட மகாத்மா காந்தியார் மறைந்தபோது





காணப்படாத, செல்லாத ஜோதி, ஒரு சாதாரண ரமணர் மறைந்தபோது தோன்றியதாம் விந்தை; மிக மிக விந்தை!

இந்தச் செய்தியும் மறுக்கப்பட்டது வான நூல் வல்லுநரால். அதே நேரத்தில் ஆகாயத்திலிருந்து ஒரு நட்சத்திரம் விழுந்தது, என்று. இது சரியா மக்கள் மன்றத்திலே வைக்கப்படவில்லை பத்திரிகைகளால் ஏன்? என்ன காரணம்?

இன்று நாம் பேசுகிறோம் இந்தக் கூட்டத்திலே, கட்டாய இந்தி ஒழிந்தது என்று வெற்றிக் களிப்போடு கூட்டம் முடிந்ததும் நண்பர்களின் வீட்டில் கூடி மகிழ்ந்து உண்போம், ஆனால்.......?

வெற்றி விழா நடைபெறும் இதே நேரத்தில் நம தியக்க நண்பர், ஆசைத்தம்பி அறிவுப் பணி புரியும் அஞ்சா நெஞ்சன் ஆசைத்தம்பி, சிறையிலே வாடிக் கொண் டிருக்கிறார். அவருக்கு ஆறுமாதம் சிறைத் தண்டனை; கடுங்காவல். ஏன்?

"காந்தியார் சாந்தியடைய" என்ற சிறு நூலை எழுதியதற்காக? அது மட்டுமா? அதனை வெளியிட்ட தோழர் கலியபெருமாளுக்கும் தண்டனை. 'அழியட்டுமே திராவிடம்' என்ற நூலை வெளியிட்ட தோழர் தங்கவேலுவிற்கும் தண்டனை, கடுங்காவல்.

ஆசைத்தம்பி செய்தது என்ன! காந்தியாரைக் கொன்றது ஒரு பார்ப்பனர் என்ற உண்மையை எழுதி

னூராம். காந்தியின் முடிவுக்கு மூட நம்பிக்கையே காரணம், மத வெறியே முன்னின்றது. மதவெறியை ஒழிக்க வேண்டுமென்றூராம். இதற்குத் தண்டனையாம்.

ஆசைத்தம்பி, இன்று இரும்புக் கம்பிகளுக்கிடையே, கலயத்திலே கஞ்சியேந்திக் கஷ்டப்படும் நிலைமை, நடக்கலாமா! அகிம்சா மூர்த்திகள் ஆட்சியிலே!

எப்படிப் பட்டவர்கள் ஆட்சி! முன்னர் ஆங்கிலன் காலத்திலே, விடுதலைப் போராட்ட வீரர்களைச் சிறையிட்டபோது 'நம் நாட்டுக் கம்பிகளால் ஆன சிறையிலே, நம் நாட்டுத் தவப்புதல்வர்கள், உள்ளே இருப்பதா; அவர்களை வாடவிடுவதா?'' என்றெல்லாம் ஆர்ப்பாட்டம் செய்தவர்களின் ஆட்சிதான். அவர்கள் ஆட்சியிலா இந்த அலங்கோலம், எழுத்துரிமை பறிக்கப்படும் கோரக் காட்சி.

இதுபோல் இன்னும் எது எதெதற்கெல்லாமோ நம்மேல் அடக்குமுறைப் பாணம், தடியடி தர்பார், சிறைக்கூடம் செல்லும் உத்தரவு, நம்மீது பாயும், அதற்குத் தயாராக வேண்டும். மனவளம், மங்காத உறுதிபெற வேண்டும். ஆசைத்தம்பி, அதற்கொரு பாடமாக, இந்த வெற்றி விழாக் கூட்டத்திலே அமையட்டும்!

காமராஜர் ஈரோடு சென்றிருக்கிறார் சமீபத்திலே! அங்கே ரேஷன் தொல்லைகளைப் பற்றி, மக்கள் அவரிடம் முறையிட்டனர்.





அதற்குக் காமராஜர், ''அப்படியா? உணவுப் பங்கீட்டிலே ஊழல்களா? சரிவரச் கிடைக்கவில்லையா, உங்களுக்குத் தேவையானது. நான் உடனே கவனிக்கிறேன். ஊராள்வோரின் பார்வைக்கு இதனைச் சுட்டிக் காட்டி ஆவன செய்கிறேன் அஞ்சற்க'' என்றெல்லாம் கருணையோடு பேசியிருப்பார் காங்கிரஸ் தலைவர் காமராஜர் என்றெல்லாம் எண்ணினால் ஏமாற்றம்தான். பின் என்னதான் கூறினார், கூறியிருக்க முடியும், என்று திகைக்கிறீர்களா! இதோ அவரது மணிமொழிகள்.

''கல்கத்தா ரயில் விபத்தைவிட இது கொடுமையா? பொறுங்கள் எல்லாம் சரியாகிவிடும்!'' என்பதே காமராஜரின் பதில்!

திகைப்பு, திடுக்கிடும் உணர்ச்சி ஏற்படுகிறதல்லவா? கல்கத்தா மெயில் விபத்து கொடுமைதான். ஆனால் அதற்காகச் சோறின்றி வாட வேண்டுமா?

ஊழல்கள், குறைகள் தவிர்க்கப்பட வேண்டும், முறையாக ரேஷன் கிடைக்க வேண்டும் என முறையிட்ட மக்களுக்கு அளிக்கும் ஆறுதல் மொழிகளா இவை? 'குலாம் காதருக்கும் கோகுலாஸ்டமிக்கும்' முடிச்சுப்போடும் வித்தையைப்போல் அல்லவா இருக்கிறது.

அவருக்கு இது கொடுமையாக இருக்காது, கல்கத்தா மெயில் விபத்தைவிட! ஆனால் பட்டப்பகலிலே, சேலத்திலே, சிறைக் கம்பிகளின் உள்ளே இருந்தவர்கள், சடசடவெனச் சுட்டு வீழ்த்தப்பட்டனரே, இது

கொடுமை யல்லவா? கொடுமையாகத் தோன்றவில்லையா?

அவர்கள் கம்யூனிஸ்ட்டுகளாகவே இருக்கட்டும் ஆட்சிப்—பீடத்தை அபகரிக்கச் சதி செய்தவர்களாகவே இருக்கட்டும். பலமான இரும்புக் கம்புகளுக்குள்ளே அடைக்கப்பட்டுள்ள 22 மனித உருவங்கள் மடிந்தது. சுட்டுக் கொல்லப்பட்டது நீதியா? கொடுமையல்லவா?

அவர்கள் வயோதிகர்கள் அல்ல; வாலிபர்கள் கிழவர்களல்ல; கட்டிளங் காளைகள். நாட்டின் புதல்வர்கள் வாழ்வின் ருசியைப் பார்க்கும் வயதைப் படைத்தவர்கள். அவர்கள் சுட்டு வீழ்த்தப்பட்டனர், சிறைக்கம்பிகளுக்கிடையே!

அவர்களது பிணங்கள் சடசடவெனச் சாய்ந்தன. நாய்கள் சுடப்பட்டு, ஒன்றின்மேல் ஒன்ருக அடுக்கப்பட்டு செல்லுவது போல, குருவிக்காரன் குருவிகளைக் கொன்று ஒன்றின்மேல் ஒன்ருகக் கம்பியிலே கட்டித் தொங்க விடுவதுபோல, மீன்களைக் கடைக்காரன் வரிசையாகத் தோரணம் போடுவதுபோல, இருபத்திரண்டு இளங்காளைகள், எழில்நிறை தமிழர்கள். மனித உருவங்கள் எடுத்துச் செல்லப்பட்டனரே; லாரிகளில்! இது கொடுமை யல்லவா? அகிம்சா வீரர்கள் ஆட்சியில், இதைக் கொடுமை யென்று கூறினுரா? ஒப்புவாரா? காமராஜர்? அந்த இருபத்திரண்டு இளங் காளைகளின் பிரிவால், மரணச் செய்தியால் இருபத்திரண்டு குடும்பங்கள் நிர்க்கதியான நிலைக்குப் போகாதா? 22 தகப்பன்மார்களின் இதயத்துடிப்பு வீணுகுமா? 22 தாய்மார்களின் கண்ணீர்த்துளி சாமான்யமா?





இவர்களுக்கு மனைவியரு மிருந்தால், காங்கிரஸ் ஆட்சிபீடத்திலுள்ள அதிகாரிகளின், மந்திரிகளின் காலடியிலே அந்த அடக்குமுறை வீரர்களின், இளமனைவியரின் இருபத்திரண்டு தாலிகளன்ருே அறுத்தெறியப் பட்டிருக்கும்! கோரம்! கோரம்! மகா கோரம்.

தாலி யிழந்த தையலர், மஞ்சள் குங்கும மிழந்த மங்கையர், மஞ்சள் பெட்டியின் மகத்துவமா பாடிக் கொண்டிருப்பர்? மனிதாபிமானமற்ற மாபாவிகள் என்ற பட்ட மல்லவோ கிடைக்கும் உங்களுக்கு. இது கொடுமை யல்லவா? கூறுங்கள்.

அவருக்கு இதற்கெல்லாம் நேரமோ, அன்றி எண்ணமோ இருக்காது. அவருக்கு வருகிற தேர்தலில், யாரை மந்திரி நாற்காலியிலே அமர வைக்கலாம் யார் காங்கிரஸ் பஞ்சாயத்துகளிலே வந்தால் தன் கட்சி வலுக்கும் என்ற எண்ணமும், இடையில் கறுப்புச் சட்டைக் கிலி கொண்டு அலறவுந்தான் நேரமிருக்கிறது. அவருக்கேன் அரிசி கிடைக்காது அவதிப்படும் மக்களைப் பற்றிய மனக் கவலை!

நாட்டின் உணவு மந்திரி முன்ஷி இருக்கிருரே அவர் உணவுப் பிரச்னையில் மிக்க கவனம் செலுத்துகிருர்? காய்கறி உண்ணுங்கள். பருத்திக் கொட்டையைக் கூடப் புசிக்கலாம், சத்துள்ளதென்று கூறப்படு

கிறது என்று மனிதர்களை மிருகநிலைக்கு இழுத்துச் செல்கிறார். மாடாக்குகிறார், மாடாக ஆகச் சொல்லு கிறார்.

எப்போது பன்றியாகுங்கள், அசிங்கப்படாதீர் கள், அது ஆண்டவரின் அவதாரம் என்று கூறுவாரோ, நானறியேன். கூறினாலும் வியப்பில்லை யென்று தோன் றுகிறதல்லவா?

பசியா? பஞ்சமா? பட்டினியா? கவலைப் படாதே! இதோ மருந்து, நிவாரணத் திட்டம் என்றார். என்ன திட்டம். பிருந்தாவனத் திட்டம், வனமகோற்சவம்.

நாடெங்கும் மரம் நடவேண்டும். விழாக் கொண் டாட வேண்டும். மரங்களைப் பாதுகாக்க வேண்டும். செடி பெரிதாகி மரமாகி, மேகங்களை ஆகர்ஷித்து மழை யைத் தருவிக்கும்; மழை பெய்தால் நிலம் வளமாகும். நாடு செழிக்கும். நாடு செழித்தால் உணவுப் பஞ்சமும், பசியும், பட்டினியும் நீங்கும்.

ஆகா! என்ன அருமையான திட்டம், மழையை வருவிக்க என்று மகிழ்ச்சிதான். ஆனால் செடி மரமாகி, மேகங்களை ஆகர்ஷித்து மழை பொழிவிப்பது எப் போது, நாடு செழிப்பது, நிலம் வளமாகி, பசியும் பட் டினியும் பறந்தோடுவது எந்தக் காலத்திலே.

ஏறக்குறைய பத்து ஆண்டுகளாவது ஆகுமே! சுய நல வாதியப்பா நீ. எதிர்கால சந்ததிக்கு நன்மைதானே என்பீர். ஆம் அவர்களுக்குச் சரி. செய்ய வேண்டியதே!





ஆனால் நம் கதி இன்றைய நிலைக்கு என்ன நிவாரணம் என்றுதான் கேட்கிறோம்.

வன மகோற்சவம், மழையைத் தருவிக்க, நல்ல முயற்சி யென்றுகூட நினைக்கிறேன் ஒருவிதத்தில். ஏன்? மழை வேண்டுமா? வருண ஜபம் செய், வருண பகவானை வேண்டு, இந்திரனைப் பூஜித்திடு என்றெல் லாம் பேசப்பட்டு, போதிக்கப்பட்டு வந்த இந்த நாட் டிலே, வருண ஜபம் செய்யும் புராணக் கொள்கையை விட்டு, மரம் நடும் மனப் பண்பு, விஞ்ஞான புத்தியா வது வந்ததே! என்றுதான் மகிழ்கிறோம்.

மழை வேண்டுமா? வருண ஜபம் பலிக்காது. மரம் நடு என்ற உண்மை புலப்படுகிறது. புராணம் மறுக்கப் படுகிறது!

மரம் நடுகிறார். முன்ஷி டெல்லியிலிருந்து நாடெங் கும் பறந்து, பறந்து! காஞ்சீபுரம் சென்றார். வரதராஜப் பெருமாளை வணங்கினார். அங்கே மரம் நட்டார். என்ன மரம்? துளசிச் செடி, துளசிச் செடி பெரியதாகி மழையை ஆகர்ஷிக்குமா? பின் என்ன?

மடமை பெருகி, மந்த மதியினராக மக்களை மதப் பிடியிலிருத்தி, அதனால் வரண்ட வாழ்வினராகத்தான் மக்கள் இருப்பர். இதனால் வரும் பலன் அவருக்கு, அவரைச் சேர்ந்தோருக்குத் தமது பிடியை நிலை நிறுத் தத்தான் பயன்படும்.

துளசியினால், டெல்லியின் பிடி இறுகும், அங்கே பனி மழை பொழியும், வளமாகும் வடநாடு. நடுவதற்கு வேறு மரமா இல்லை?

மேல் நாட்டிலே மழை பெற வானவூர்த்தியிலே மேக மண்டலம் சென்று, மேகத்தை விஞ்ஞான அறிவுக் கருவியால் இழுத்து வந்து மழை பெய்விக்கிறார்கள். அங்கே அப்படி! இங்கே இப்படி, துளசிச் செடி நடுகிறார்கள். கோயிலிலே கும்பலைப் பெருக்க!

வனமகோற்சவம், அதற்கு ஒரு விழா. ஆடம்பரச் செலவு! மந்திரிகள் சுற்றுப்பயணம் நாள்தோறும், எதற்கு?

இந்த வேலையை, அதற்கென இருக்கும் விவசாய இலாக்காவினரிடம் ஒப்படைத்திருக்கலாம், இவர்களை விட மிகவும் திறம்படச் செய்து முடித்திருப்பார்கள். அதைவிட்டு வீணே பித்துப்பிள்ளை விளையாட்டு விளையாடுகின்றனர்.

பிள்ளைகள் சிறுநீர் கழித்துவிட்டுப் புளியங்கொட்டையை அதிலே நட்டுப் புளியமரம் முளைக்கிறதா என்று பார்ப்பது போன்ற பித்துப்பிள்ளை விளையாட்டன்றி வேறென்ன வென்று கூற முடியும், இதனை?

மந்திரி முன்ஷி மேலும் கூறுகிறார். "பெண்களே நீங்கள் அழகிகளாக வேண்டுமா? காய் கறிகளையே உண்ணுங்கள். காய்கறி சாப்பிடுவதால் உங்கள் வசீகரம் அதிகப்படும். அழகான பெண்களாவீர்கள்" என்று.





இதற்கும் 'அழகி ராஜகுமாரியின் முகவனப்பிற்கும், வசீகரத்திற்கும் என்ன காரணம் தெரியுமா? குமாரி கமலாவின் எழில்மிகு வதனம் எதனால் ஏற்பட்டது தெரியுமா? எல்லாம் லக்ஸ் டாய்லட் சோப்பின் நறுமணம் மிக்க நுரைகளால்தான்' என்று சோப் கம்பெனிக்காரர்களின் விளம்பரத்திற்கும் என்ன பேதம், வித்தியாசம்.

வடநாடு அரசியல், பொருளியல், வாணிபத் துறையில் ஆதிக்கம் செலுத்தித் தமிழர்கள் முன்னுக்கு வரவொட்டாது, வளர்ந்து நிற்கிறது.

எங்கள் நாட்டிலே, தென்னாட்டிலே, திராவிடத் திரு நாட்டிலே, பல்வளங்களும் உண்டு. ஆனால் இந்நாட்டுவளம், இங்கேயே பயன்பட, பயன்படுத்த, வகை, வழி இல்லை. யாவும் அங்கே, மேலிடத்திலே, வட நாட்டிலே, பலம்பொருந்திய மத்திய சர்க்கார் வசம்!

மொழி, இனம், கலை, கலாச்சாரம், பழக்க வழக்கம், பண்பு, உடை, உணவு, நில அமைப்பு, வரலாற்று முறை எதிலும் திராவிடர் தனிப் பண்புடையவர்கள். அவர்கள் தாம் வாழ, திருநாட்டைத் தனிநாடாக, எல்லா அதிகாரமு முள்ளதாக ஆக்க வேண்டும். அதுதான் நாம் வாழ வழி, இருக்கும் ஒரே வழி, "திராவிட நாடு, திராவிட நாடு".

திராவிடம் ஏன் பிரிய வேண்டும்? திராவிடம் தனித்திருந்தால் இந்த நாட்டைத் திராவிடரே ஆள்வார். திராவிட சமுதாயமே அரசோச்சும். திராவிடரை

வேறெவரும் கட்டியாள முடியாது. திராவிடம்' தன் நாட்டு வரிப்பணத்தைத் தன் நாட்டின் முழு நலனுக்கே செலவிடும், செலவிட முடியும்.

வரிப்பணத்தை வடநாட்டிலே, மத்திய சர்க்காருக்குக் கொட்டிவிட்டு, அவர்களிடம் எதைச் செய்யவும், அனுமதி, எந்தத் திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமானலும் அவர்களிடம் பிச்சை கேட்கும் நிலை இருக்குமா? இருக்கத்தான் முடியுமா? இருக்க விடுவோமா? இந்த உண்மையைக் கூறி, எடுத்துக் காட்டுவது நாங்கள் மட்டுமல்ல. தேசியத் தாள்களே கூட இந்த நிலைக்கு வந்துள்ளன.

சமீபத்திலே, ஆனந்த விகடனில் ஒரு கேலிச் சித்திரம் தீட்டப்பட்டிருந்தது. அதிலே சென்னை மந்திரிகள் கையிலே ஓடேந்தி மத்திய சர்க்கார் மந்திரிகளைப் பார்த்துப் பிச்சை கேட்கின்றனர். அதற்குப் பக்கத்திலே ஒரு ஆள் இவர்களிடம் பிச்சை கேட்கிறன். அவனது உடலில் 'சென்னை கார்ப்பரேஷன்' என்று எழுதப்பட்டுள்ளது. எல்லாவற்றிற்கும் கீழே, "பிச்சை யெடுத்ததாம் பெருமாள், அதைப் பிடுங்கிக்கொண்டதாம் அனுமார்'' என்று வேறு எழுதப்பட்டுள்ளது. என்ன பொருள் இதற்கு?

ஆனந்தவிகடன் கேலிக்கு இதைத் தீட்டியிருக்கலாம். ஆனல் உண்மை நிலைமை என்னவென்று நன்ருகப் புரிகிறதல்லவா?

இன்னும் சற்று விளக்க, ஒரு உதாரணத்தைச் சொல்லுகிறேன்.





பலர் 'அபூர்வ சகோதரர்கள்' என்ற பேசும் படத்தைப் பார்த்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். கவனியுங்கள், நான் இங்கே பேசும்பட விமர்சனம் செய்யவில்லை. அதிலுள்ள குற்றங் குறைகளைப் பேச வரவில்லை. பேசும் இடமும் இதுவல்ல. அதிலே ஒரு கருத்து, நாம் கவனிக்க வேண்டிய கருத்து, திராவிட நாட்டிற்கும் வட நாட்டிற்குமுள்ள தொடர்பின் உண்மை உருவம் காணக்கிடக்கிறது. அது மிகவும் பொருந்தி யிருக்கிறது.

'அபூர்வ சகோதரர்கள்' அவர்களது பிறவியே அபூர்வந்தான். ஒரு ஜமீன்தாரர்; குறுநில மன்னர் அவருக்கு இரு ஆண் குழந்தைகள் பிறந்தன. அபூர்வப் பிறவிகள்! இரு குழந்தைகளும் தனித்தனியாகப் பிறக்கவில்லை. ஒரே சமயத்தில், ஒன்ருக, ஒன்ரேடொன்று ஒட்டிக்கொண்டு பிறந்தன.

அவ்விரு அபூர்வ சகோதரர்களையும் வைத்தியர் ஒருவர் இரண்டாக, ஒட்டியிருந்த பகுதியை வெட்டிப் பிரித்தார். பிறகு காலம் எப்படி யெப்படியோ கதையில் மாறுகிறது.

இரு சகோதரர்களும் தனித்தனியே, தனித்தனி நபர்களால் வளர்க்கப்பட்டனர் ஒருவன் நாட்டிலே வாழ்ந்தான், அவன் விஜயன். மற்றவன் காட்டிலே வாழ்ந்தான், அவன் விக்ரமன்.

இருவரும் இயற்கையில் ஒட்டிப் பிறந்தனர். செயற்கையால் வெட்டிப் பிரிக்கப்பட்டனர். ஆனலும்

விஜயனுடைய உணர்ச்சிக்கு விக்ரமன் அடிமை! கட்டுப்பட்டவனுகக் காணப்படுகிறுன், கதையில்.

விஜயனைக் கத்தியால் குத்தினுல், விக்ரமனுக்கும் அதனுல் வலிக்கும். விஜயன் அடிபட்டால், அதனுல் ஏற்படும் துன்பம், வலி விக்கிரமனுக்கும் ஏற்படுகிறது. விஜயன் அழுதால் விக்ரமனும் அழுகிறுன்.

விஜயனின் உணர்ச்சிக்கு அடிமைப்பட்டே வாழ வேண்டிய நிலை, நிர்ப்பந்தம் விக்ரமனுக்கு ஏற்பட்டு விட்டது.

இதிலே, கதையில் ஒரு முரண்பாடு, மிக மிக முக்கியமான முரண்பாடு இருக்கிறது. அதைத்தான் நாம் கவனிக்க வேண்டும். இங்கே நடப்பது பட விமர்சனமல்ல ஏற்கனவே கூறியதை மீண்டும் நினைவுறுத்துகிறேன்.

முரண்பாடு. ஆம் முரண்பாடுதான். விஜயனின் உணர்ச்சிக்கு விக்ரமன் அடிமை. விஜயனுக்கு ஏற்படும் உணர்ச்சிகளை விக்ரமனும் அனுபவித்தே தீரவேண்டும். அவனுக்கு அடி என்ருல் இவனுக்கும் அடிபடும் உணர்ச்சி, அவனுக்கு வலி, வருத்தம் என்ருல் இவனுக்கும் அதே நிலைதான்.

எல்லாம் சரி! ஆனுல் விஜயனின் துக்க சம்பந்தமான, நன்மை யல்லாத, கடுமையான உணர்ச்சிகள் மட்டுந்தான் விக்ரமனைக் கட்டுப்படுத்துகின்றன.

அடி, உதை, வலி, வருத்தத்தில்தான் பங்கு. அதுவும் அவனைப் போலவே உணர்ச்சி வயப்பட்டு வாடி





வதங்கு மளவுக்குப் பங்கு! ஆனுல் விஜயனின் மன உல்லாசம், இன்பக் கேளிக்கைகளில் விக்கிரமனுக்குப் பங்கில்லை. அந்த இன்ப உணர்ச்சிகள் அவனுக்கும் உண்டாவதில்லை. ஏனோ?

விஜயன் அடிபட்டால், தானும் அடிபடும் உணர்ச்சி, அதனுல் ஏற்படும் வலி முதலிய எல்லாம் விக்ரமனுக்கு ஏற்பட்டுத்தீருகிறது. சந்தோஷத்திலே சமமில்லை!

விஜயன் தன் காதலியோடு கட்டிப் பிடித்துக் கொஞ்சி விளையாடும் விக்ரமனுக்குத் தாங்க முடியாத வேதனைதான் உண்டாகிறதே தவிர, அவனுக்குக் கட்டித் தழுவிக் கொஞ்சி விளையாடிடும், காதல் இன்பம் சுரப்பதில்லை; சுரக்கக் காணேம். மன வருத்தந்தான் ஏற்படுகிறது!

ஏன் இந்த முரண்பாடு? அவன் நாட்டிலே நாகரிக வாழ்வு நடத்தப் பழகியவன்; இவன் காட்டிலே வாழ்ந்தவன் என்பதோ ஏதோ நமக்குப் புரியாத முரண்பாடாக இருக்கிறது.

இதிலே உள்ள சூட்சுமத்தை மட்டும் நாம் கவனிக்க வேண்டும். கஷ்டத்தில் மட்டும் பங்கு, சுகத்திலே மட்டும் கிடையாது.

அடிக்கு அடி, வலிக்கு வலி, உதைக்கு உதைபடும் உணர்ச்சி மட்டும் உண்டு. காதல் தேம்பாடி மகிழும் போது, காதல் சுரப்பதில்லை மாருகக் 'காதல்பித்து பிடிக்கிறது. கஷ்டம் வருகிறது.

அவனடையும் கஷ்டத்தை உள்ளபடி உணருகிறுன். ஆனல் அவனடையும் இன்பத்தை நுகரமுடியவில்லை. நல்ல அபூர்வ சகோதரர்கள்.

இதிலுள்ள சூட்சுமம் இதுதான். இன்பத்தில் பங்கில்லை, துன்பத்தில் பூரண பங்கு. இது விஜயன்—விக்ரமன் இருவரிடையே கண்ட காட்சி. இதே நிலைதானே வட நாட்டிற்கும் தென்னுட்டிற்கும்; திராவிட நாட்டிற்கும் இருக்கின்றது?

வடநாடு வரி கொடுக்கிறது; நீயும் கொடு. கப்பல் வாங்குகிறது, பணம் வேண்டும். கொடு. எதற்கெடுத்தாலும் வரியில் பங்கு. ஆனல் ஆட்சி முறையில் அவ்விதமில்லை. உலக பாங்கியிலிருந்து கடன் வாங்குகிருர்கள். எங்கட்கும் பகுதி தாருங்கள் என்ருல் மறுக்கிருர்கள். ஆனல் திருப்பித் தருவதில் நமது பங்கும் கூடத்தானே போகிறது. நாட்டிலே எதற்கும் அவர்கள் தயவைத்தானே நாடவேண்டி யிருக்கிறது.

பஞ்சமா பகிர்ந்துகொள். பட்டினியா? அனுபவி! போரா? அனுப்பு படைகளை, கொடு பணங்காசுகளை. ஆனல் ஆலைகள் எங்கே அதிகம்? வடநாட்டில், தொழில் எங்கே, அங்கேதான். வாணிபத்தின் சூத்திரக் கயிறு, அதுவும் வடநாட்டில்தான்.

யாவும், நல்லவை, நாட்டுக்குத் தேவையானவை, யாவும் அங்கே, இங்கே பஞ்சம், பட்டினி, பரிதாப நிலை. பிச்சையேந்தி நிற்கும் இழிநிலை சென்னை சர்க்காருக்கு,





மத்திய சர்க்காரிடம், ஆனந்தவிகடன் கேலிச் சித்திரத்தில் தீட்டியபடி.

அணைக்கட்டு கட்டவேண்டும், பணமில்லை. பள்ளிகள் வேண்டும், பணமில்லை. எதற்கெடுத்தாலும் பணமில்லை இங்கே. இந்த மாகாண சர்க்காரிடம். இந்நிலை மாறி நம் வரிப்பணம், நம் தேவைக்குப் பயன்படவேண்டும் என்பதே நமது எண்ணம்.

உலகெங்கும் பற்பல நாடுகளிலும் ராஜ தூதர்கள் என்று கொள்ளைச் சம்பளத்தில் மத்திய சர்க்காரில் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றனர். இந்த வகையில் செலவிடப்படும் தொகை மட்டும் 1,53,88,900 ரூபாய். மிக அதிகமான தொகை பாதுகாப்பு இலாகாவுக்கு ஒதுக்கப்பட்டுள்ளது.

வெள்ளையன் ஆண்டகாலத்திலே அவன் பணத்தையெல்லாம் பீரங்கிக்கும், துப்பாக்கிக்குமே செலவிடுகிறுன். இரத்த வெறி கொண்டலைகிறுன், என்று ஏசினர். அந்த அகிம்சா மூர்த்திகள் ஆட்சியிலேதான், பாதுகாப்பு இலாகாவுக்கென்று, வெள்ளையன் செலவிட்டதைப்போல மூன்று மடங்கு தொகை செலவிடப் படுகிறது.

ஆனல் ஞாயிறு தபாலாபீஸ் லீவு விடாமல் இருந்தால், சிப்பந்திகளுக்கு அதிகம் தரவேண்டிய பணம் ஒரு கோடி ஆகிறதாம், இதைத் தாங்க முடியாது என்று ஞாயிறன்று விடுமுறை விட்டுள்ளனர். இதனல்

பற்பல சங்கடங்கள் ஏற்படுகின்றன, சாதாரண மக்களுக்குத்தான் தொல்லை, இதனால்.

காங்கிரஸில் சேர்ந்து உழைத்து உருக்குலைந்த உண்மைத் தியாகிகள், நம் தமிழர்கள் நிலைதான் என்ன இன்று. அவர்கள் பெயர் புகழ் எங்கே!

தன் சொத்து, சுகம் யாவையும் இழந்து, கைதியாகிக் கலயமேந்திக் கஞ்சி குடித்துக், கடுந்தண்டனையடைந்து, செக்கிழுத்துச் சீரழிந்த எங்கள், கப்பலோட்டிய தமிழன் வீரத் தமிழன், தூத்துக்குடி, வ. உ. சிதம்பரத்தின் நிலைதான் என்ன? எத்தனை பேருக்குத் தெரியும். அவருக்கு என்ன நினைவுச்சின்னம்?

திருப்பூர் வீதியிலே மூவர்ணக் கொடியேந்தி நின்ற வாலிபன் குமரன் குண்டாந்தடியடி பட்டும், மரண மூர்ச்சையாகி, மாண்டிடும்வரை வந்தேமாதர கீதம் பாடிக் கொடியை விடாது ஏந்தி நின்ற வீரத் தமிழ் மகன், திருப்பூர் குமரனுக்கு என்ன செய்யப்பட்டது. அவனது வீர மரணத்தின் பலன்தான் என்ன?

தென்னாப்பிரிக்கா இந்தியப் போராட்டத்திலே, வெள்ளையன் ஒருவன் காந்தியாரைக் குறிபார்த்துச் சுட்டான்.

'ஆ, எங்கள் வழிகாட்டி சாவதா? இந்திய நாட்டின் பிதா, விடுதலை வீரன் காந்தி சாவதா என் தந்தை சாவதா?' என்று துடிதுடித்துப் பதை பதைத்து இடையிலே தாவி நின்று, காந்தியின் மார்பிலே பாயச்சென்ற குண்டைத் தன் மார்பிலேந்தி மாண்ட மறத்தமிழச்சி,





வீரத்தமிழ் மகள் தில்லையாடி வள்ளியம்மையின் வரலாறு தெரியுமா? உங்களுக்கு!

எத்தனை வந்தேமாதர வீரர்கள் அறிவர். எத்தனை நினைவுகள், அவர் பேரால் உண்டு?

இதோ கோவை சிங்கநல்லூர் M. G. ராமசாமியின் தியாகம் எங்கே?

அவர்கள் மங்கி மண்ணாகி விட்டார்கள். அவர்களது, பெருமை தியாகம், தன்னலமற்ற வீர மரணம், விழலுக் கிறைத்த நீராக மங்கிடக் காரணம் என்ன?

இதனை ஏன் மறந்தனர், இவர்களைப் பற்றிய பேச்சு, ஞாபகம், நினைவுச் சின்னம், வரலாற்று நூல்கள் கிடையாது! ஆனால் எங்கோ பிறந்து எதையோ செய்த சாயி பாபாவுக்கு இங்கே கோயில் கும்பாபிஷேகம் எல்லாம்!

சாயிபாபா உருவத்தைச் செதுக்காத, பெறிக்காத இடமேயில்லை! இன்னும் குழந்தைகளின் அரைமுடி ஒன்றுதான் பாக்கி, எங்கும் எதிலும் உண்டு!

ஆனால், தஞ்சை, கோவை, தூத்துக்குடி வீரர்களுக்குத், தியாகிகளுக்கு மரியாதை கிடையாது. நம்மவர் மாண்பு மறைக்கப்படுகிறது.

இந்திய அரசாங்கத்தினர் வெளியிடும் செய்திப் படங்களைத்தான் பாருங்கள். நேரு போன்றோர் அமெரிக்க விஜயம் அதிவிளம்பரத்துடன் காட்டப்படும்.

அவரது குமாரி, பேரன் முதலியோரும் விளக்கிக் கூறப்படுவர். அவரது இந்தோனேஷிய விஜயத்ின்போது அவர் அருகே கூட காட்டப்படவில்லை, நமது டாக்டர் சுப்பராயன் அவர் அங்கே இந்திய அரசாங்க தூதர். ஒரு நிமிடம் அவர் உருவம் தெரிகிறது. ஆனால் அவர் பெயர் கூறப்படவில்லை. இத்தகைய பேதம் காட்டப்படுவதேன். தமிழன் தாழ்த்தப்படுவதேன்? உதாசீனம் செய்யப்படுவதேன்?

தமிழன் தன் மானத்தோடு வாழவேண்டும் தனது நாட்டைத் தனிநாடாக ஆக்க வேண்டும் திராவிடத்தைப் பெறவேண்டும் அதற்குப் பலப்பல போராட்டங்களை நடத்த வேண்டியிருக்கும். அறப்போர், கட்டாய இந்தி எதிர்ப்புப் போரில் வெற்றி பெற்றோம் இத்துடன் அறப்போர் முடியவில்லை, முடிந்து விடாது. முடியாது போராட்டம் இன்னும் தொடர்ந்து நடந்தே தீரும்.

போராட்டம் ஒரு தொடர்கதை, சிறு கதையல்ல அதிலே ஒரு கட்டம் அறப்போர் இந்தி எதிர்ப்புப் போர் இதில் வெற்றி! அடுத்தது என்ன? என்று எதிர் நோக்கியிருங்கள்.

வைதிகபுரியும், வாணிப ஆதிக்கக்காரர்களும் நம்மை முன்னேற விடார். திராவிட நாட்டை நம் இலட்சியத்தை யடைய நாம் இன்னும் பலப்பல போராட்டங்களை நடத்தியே தீரவேண்டிய நிர்ப்பந்த நிலை வந்துவிட்டது.





உரிமைப் போர், ஆண்ட இனம் வீழ்ந்தது, அதனை மீண்டும் விழிப்புறச் செய்து, எழுச்சி பெறச் செய்யும் போர். போர்! போர், இனப்போர், இன அரசுப் போர், உரிமைக்குப் போர், இனவிடுதலைக்கு இனத்தைக் காத்திடப் போர், இனத்தை வாழ வைத்திடப் போர், இன எழுச்சிப் போர். அறப்போர் "திராவிட நாடு" அடையும்வரை போர். அறப்போர் தொடரும், தொடர்ந்தே தீரும், தொடர் கதையாக.

இந்த இறுதிப் போரிலே பலப்பல, பயங்கரக் கட்டங்கள் ஏற்படலாம். பதறக்கூடாது. வஞ்சகரின் வலையிலே. விபீஷணர்களின் வாய் வீச்சிலே, அனுமார்களின் அச்சுறுத்தலிலே மயங்கிடவோ, அன்றி மருண்டிடவோ கூடாது, அஞ்சா நெஞ்சினராய் அறப்போர் தொடங்குவோம்.

போருக்கு வாருங்கள் வாலிபர்களே, இன விடுதலைக்கு வாலிபர்களை அனுப்புங்கள் பெற்றோர்களே, தாய்மார்களே என்று வரவேற்கிறேன். அது உங்கள் கடமை. இனத்திற்குச் செய்யும் நல்ல தொண்டு.

வரும் போராட்டத்திலே, வாகைசூடிட வீட்டுக்கொரு மகன் தேவை. அனுப்புங்கள். இரு பிள்ளைகள் இருந்தால் ஒருவனை அனுப்புங்கள். ஒரே ஒரு மகன் இருந்தால் நீங்களே வாருங்களே, அவனை வாழவிட்டு. வீட்டைக் கவனிக்கவிட்டு.

உங்கள் மகன் மாண்டாலும் பெரிதல்ல. இனத்திற்காகத் தன்னுயிரைத் தியாகம் செய்த மாவீரன் என்று எதிர்கால சந்ததி வாழ்த்தும், போற்றும். அவர்

களின் கல்லறைகளின்மேல் அவர்களின் வீரவாழ்வு, வீரத் தியாகம், இனத்திற்காக இறந்த பண்பு, யாவும் பொறிக்கப்படும். அத்தகைய வீரமகனின் பெற்றோர் என உமது பெயரும் பொறிக்கப்படும். பக்கத்திலே, அந்தப் புகழ் உங்களைத் தேடி ஓடி வருகிறது. வரவேற்று மகிழுங்கள்.

இன்றைய நிலையிலே நாம் வாழ வழியில்லை. மானத்தோடு பேச உரிமையில்லை. எழுத இடமில்லை. பார்ப்பனீயத்தைப் பற்றிப் பேசாதே 'அடக்குமுறை கூடாது என்று கூறுதே' பகுத்தறிவாளனுகை, தன் மானத் தமிழனுகை வாழ்வதே கூடாது என்ற முறையிலே ஆட்சி வேகம், அடக்குமுறை தர்பார் அமைந்துள்ளது.

கேள்வியின்றி, விசாரணையின்றிச் சிறையிடும் சட்டம் உலவுகிறது. வாயடைப்புச் சட்டம், எழுத்துரிமை பறிக்கும் திட்டம் நடக்கிறது.

நமக்கு எதிர்ப் புரட்சி; எதிர் தாக்குதல் பலப்பல முறைகளில், நேராகச் சில சமயங்களிலும், மறைவாகப் பலமுறையும் கையாளப்படுகிறது.

காங்கிரஸ் பிரச்சாரம் ஒரு பக்கம், ஆட்சியாளரின் அடக்குமுறை வேகம் மற்றொரு பக்கம் வைதிகப்புரியின் வஞ்சகத் திட்டம் மற்றொரு பக்கம் என நம்மைச் சுற்றி வளைத்துக்கொண்டிருக்கிறது. இதிலிருந்து எதிர் நீச்சல் செய்து நமது குறிக்கோளை, இலட்சியத்தை, இன்பத் திராவிடத்தை அடையவே நமது போர்ப் பரணி, இன முழக்கம்.





இன முழக்கம் 'திராவிடநாடு திராவிடருக்கே' என்ற இனமுழக்கம் திக்கெட்டும் தீரத் திராவிடர்களே கிளம்புங்கள்.

வாழ்ந்த நாம் வீணர்களாய் இருப்பதா? சேரன் சந்ததிக்காரர்களாகிய நாம் சும்மா இருப்பதா, சொத்தை வாதங்களைக் கண்டு!

பாண்டியன் பரம்பரையிலே பிறந்த நாம் பதுங்குவதா பழமையைக் கண்டு.

சோழனின் சொந்தக்காரர்களாகிய நாம் சோதாக்களாய் வாழ்வதா?

சொகுசுக்காரர்களே, பழமைப் பலிபீடம் நோக்கிப் புறப்படுங்கள், புறப்படுங்கள்.

பழமை, மூட நம்பிக்கை, மதம், கடவுள், கலை, எதுவாயினும் நமது இலட்சியத்தைப் புறக்கணிக்க விடோம் என்று விண்ணதிரக் கிளம்புங்கள்.

திக்கெட்டும் திராவிட இன முழக்கம் ஒலிக்கட்டும். முழங்கட்டும் திராவிட நாடு திராவிடருக்கே என்ற ஒலி, முழக்கம், இலட்சிய கீதம் வாழட்டும். வளரட்டும்.

இதற்காக உங்கள் பங்கைக், கடமையை, தன்மானத்தை, வீரத்தைக் காட்டுங்கள். திராவிடத்தின் வாலிபர்களே, வயோதிகர்களே, தாய்மார்களே, தேசீயத் தோழர்களே, திக்கெட்டும் பரவட்டும் "திராவிட நாடு திராவிடருக்கே" என்ற இன முழக்கம்.

வணக்கம்.

# திராவிட சம்பத்து

## அரசியல் நோயாளிகள்

கண்ணை மூடிக்கொண்டே படுத்திருப்பார்கள். திடுக்கென கத்துவார்கள் 'அய்யோ அப்பா' என்று! இப்படி சில அரசியல் நோயாளிகள் இருக்கிறார்கள். நான் நோயாளி என்கிறேன்; அதை அவர்கள் 'ஸ்டண்டு' என்பார்கள், வாயை மூடி வாலைச்சுருட்டி உட்கார்ந்திருப்பது. எதிர்பாராத நேரத்தில் எழுந்து பாய்வது. அந்தப் பாய்ச்சலிலே பயன் இருந்தால் மேலும் மேலும் தாவுவது, இல்லாவிட்டால் பழைய படியே மரக்கிளையில் தொங்குவது, இது நமது அக்கிரஹாரத்தின் பிரதிநிதி—அம்மாமிகளின் அபிமானச் செல்வன் ஆனந்தவிகடனுக்குப் பழக்கமான சமாச்சாரம்.

## வால் ஆடுகிறது

தென்னாட்டுச் செல்வங்களைப் பற்றி எழுத ஆரம்பித்தது, நம்மீது ஒரு பாய்ச்சல் பாய்ந்திருக்கிறது. திராவிட சம்பத்து! என்று தலைப்பு—அதிலே விகடனின் வால் விநோதமாக—விசித்திரமாக—விபரீதமாக ஆடுகிறது.





"மகிஷாசுர மர்த்தனியின் கதை ஒரு பழைய திராவிடக் கதையாக இருந்து புராணம் புகுந்திருக்கும் என ஊகிப்பது தவறாகாது."

இப்படி எழுதியிருக்கிறது முதலில். எனக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. நாம் படிப்பது ஆனந்தவிகடன் தானே என்று திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டேன்.

'திராவிடக் கதைகளில் புராணம் புகுந்துவிட்டது' இதைச் சொல்வது சாதாரண விஷயமா? அதுவும் விகடன், வேத விற்பன்னர்களின் ஏகக்குரல்—அது எழுதுமா இப்படி? எழுதியிருக்கிறது, எனவே வியப்படைந்தேன்,

'திராவிடக் கதைகளில் புராணம் புகுந்துவிட்டது' எவ்வளவு அற்புதமான உண்மை இதைச் சொன்னதற்காக எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறோம், நாம்.

## புராணம் புகுந்து விட்டது

திராவிடக் கதைகளில் புராணம் புகுந்துவிட்டது. ஆமாம்; ராமாயணம் திராவிடக் கதை, ராமனுக்கும் ராவணனுக்கும் நடந்த போர் பற்றி எழுந்த திராவிடக் கதை, அதில் புராணம் புகுந்துவிட்டது என்று கூறினோம். அதை எதிர்த்தார்கள்; இப்போது விகடன் கூறுகிறது...மகிஷாசுரமர்த்தனி என்ற திராவிடக் கதையில் புராணம் புகுந்துவிட்டது என்று!

நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறோம்; தாமதமாகவாவது புத்தி வந்ததே என்று! ஆனால் விகடன் அவவளவு பைத்தியக்கார னல்லவே.......பழைய பழக்கத்தை அறவே விட்டுவிடவில்லை, கட்டுரையின் முடிவிலே கொஞ்சம் விஷத்தையல்லவா கக்கியிருக்கிறான்.

## விஷம வேலை

எங்கே திராவிடக் கதை என்று கூறுவதால் 'திராவிட நாடு! பிரச்னைக்கு இடங் கொடுத்துவிடுவோமோ என்று பயந்துகொண்டு "திராவிட சம்பத்து என்றால் அப்படி ஒரு இனம் இருந்ததாகவோ இருக்கிறதாகவோ நாம் ஒப்புக் கொள்ளவில்லை."

விகடனின் விஷமத்தைப் பாருங்கள். "இனவெறிக்கொள்கை, ஒரு 'மித்' (Myth) அதாவது புராணக் கற்பனை என்கிறார்கள் இன்றைய விஞ்ஞான அறிஞர்களும் ஆராய்ச்சியாளரும்."

விஞ்ஞான அறிஞரை, ஆராய்ச்சியாளரை எதற்குப் பயன்படுத்துகிறார் கவனியுங்கள், விகடனார்! இனவெறிக்கொள்கை ஆகாதென்கிறார்களாம் அறிஞர்கள். இந்த வார்த்தைகளை வைத்துக்கொண்டு நம் இன முழக்கத்தைப் பாழாக்கக் கனவு காண்கிறார் நகைச் சுவை குரங்கார்!

## இனவெறி—இனப்பற்று

இனவெறி கூடாதுதான் அதைத்தான் ஆரிய இனத்துக்கு அடிக்கடி சுட்டிக்காட்டி வருகிறோம். மனி





தனைத் தொடக்கூடாது என்ற மமதையை—மகேஸ்வரனை நீதான் பூஜை செய்யவேண்டும் என்ற மண்டைத் திமிரை—இனவெறியை—விட்டுவிடு என்று கூறுகிறோம், நாமக்கு ஏற்பட்டிருப்பது இனவெறியல்ல இனப்பற்று. இனவெறி...இன்னொரு இனத்தை அழித்து, அடக்கி தன் இனத்தை வளர்ப்பது. இனப்பற்று...தன் இனத்தைப் பாதுகாத்து இன எழுச்சி ஏற்படுத்துவது.

முன்னது ஆரிய முறை. பின்னது திராவிடர் முறை. நம் முறை.

விஷமம் செய்ய எண்ணிய ஆரிய ஆஞ்சநேயர் முன்னுக்குப்பின் முரணில்லாமலாவது எழுதினாரா என்றால் அதுவுமில்லை.

## ஆப்பசைத்த குரங்கு

முதலில் திராவிடக் கதையில் புராணம் புகுந்தது என்று நமது குரலில் பேசினார்.

பிறகு இனவெறிக் கொள்கை கூடாது என்று அவர் மொழியில் கர்ச்சித்தார்.

இறுதியில் அதற்கு ஆக்கந்தேடுவதற்காகப் புறப்பட்டு ஆப்பசைத்த குரங்காகிறார், பாபம்!" திராவிட சம்பத்து என்றால் திராவிடமொழி வழங்கும் பிரதேசத்தில் போற்றிப் பாதுகாக்கத் தக்க பெருஞ்செல்வம் என்றுதான் பொருள்."

விகடரின் விளக்கம் போகும் போக்கு இப்படி! திராவிட இனத்தை மறுத்தவர்—அப்படி ஒரு இனம் இருந்ததில்லை என்றவர்—திராவிட மொழியை ஒத்துக் கொண்டு அது வழங்கிய பிரதேசத்தையும் ஒத்துக் கொண்டிருக்கிறார்.

## குப்பை மேட்டுக் குயில்கள்

ஆங்கில மொழி வழங்கிய இடம் ஆங்கிலநாடு. பிரஞ்சு மொழி வழங்கிய நாடு பிரான்சு நாடு. திராவிட மொழி வழங்கிய நாடு திராவிட நாடு என்பது ஏனோ தெரியவில்லை ஆனந்தவிகடருக்கு? தெரியாமலில்லை. தெரிந்தும் அதை மறைக்கும் தைரியம் இன்னும் கொஞ்சம் ஒட்டிக்கொண்டிருக்கிறது அவருக்கு! பிரதேசம், நாடு, இவற்றை விட்டுவிடுவோம். திராவிட மொழி பேசியவர்கள் திராவிடராய்த்தானே இருக்க வேண்டும் விகடரே. கிரேக்க மொழி பேசியவர்கள் கிரேக்கர் என்பது போல விகடரே! விஷமத்தனத்தால் உண்மைகளை விஷமாக்குவது உமது பரம்பரை வேலை. இப்போது நான் தந்த விளக்கத்தால் நீர் நாளைக்கே மரத்தைவிட்டு இறங்கிவிடுவீர் என்று நிச்சயமாக நினைக்கவில்லை. திராவிடம், திராவிட மொழி, திராவிட இனம், எல்லாம் கற்பனைக் கோட்டை என்று கத்துகிறார்களே; அந்த குப்பை மேட்டு குயில்களின் பேச்சிலே பொதுமக்கள் ஏமாந்துவிடக் கூடாதே என்பதற்குத்தான் இதைச் சொல்ல நேரிட்டது. நீங்கள் போகலாம் வாலைச் சுருட்டிக் கொண்டு!



# முக்கிய குறிப்பு

'திராவிட சம்பத்து' என்று தலைப்பிட்டு 'திராவிடத்தை கேலிச் சித்திரமாக்கிய அதே 'ஆனந்த விகடன் 20-5-51-ந்தேதி இதழ் 55-வது பக்கத்தில் 'புத்தக உலகம்' என்ற தலைப்பில், 'மதத்தின் மறு பிறப்பு' என்ற துணைத் தலைப்பில் புத்தகங்களின் விளக்கவுரை தரப்படுகிறது.

இதில் இரண்டாவது புத்தகமாக 'ஸ்ரீ சங்கர விஜயம்' ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி என்ற நூலைப்பற்றி எழுதிய விளக்கத்தைக் கவனியுங்கள்:—

"பாரதியார் சொல்லுகிறார் தமது 'புனர் ஜன்ம'க் கட்டுரையிலே; 'நமது வேதம் நமது சாஸ்திரம், நமது ஜனக்கட்டு, நமது பாஷைகள், நமது கவிதை, நமது சிற்பம், நமது சங்கீதம், நமது நாட்டியம், நமது தொழில் முறைகள், நமது கோபுரங்கள், நமது மண்டபங்கள், நமது குடிசைகள்—இவை அனைத்துக்கும் பொதுப் பெயர் ஆரிய சம்பத்து. ஆரிய திராவிட இன வேற்றுமைகளில் பாரதியாருக்கு நம்பிக்கையே இல்லையென்பது பிரசித்தம்.

பாரதியாரின் ஆரிய ஸம்பத்து பாரத தேசத்தின் பொதுவுடைமைதான். 'நமது வேதம்' என்று முதலாவது ஸம்பத்தாகக் குறிப்பிடுகிறாரே பாரதியார், அந்த

வேத வேதாந்தம் தான் நமது மூல ஸம்பத்து, மூல பலம். மாக்ஸ் முல்லர் போன்ற எத்தனையோ மேதாவிகள் இதை உலக அறிவுக் களஞ்சியத்திலேயே மூல ஸம்பத்து என்று போற்றி யிருப்பினும், இந்நாளில் இத் தென்கோடியில் வேத நிந்தனை வேதாந்த நிந்தனைகள், வீழ்ச்சி—முழக்கங்கள் எழுவது வருந்தத்தக்கதே.

இந்த நிலையில் ஸ்ரீ காமகோடி பீடம் சங்கராச்சாரிய சுவாமிகளின் ஆசியும் ஆதரவும் கொண்டு சென்னையில் சமயத் தொண்டாற்றி வரும் ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்திற்கு நன் மக்களின் நன்றி உரியதாகும். இக்கழகத்தார் வெளியிட்டுவரும் ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளியில் 'ஸ்ரீ சங்கரவிஜயம்,' பொதுஜன ரம்யமான ஓரழகிய சிறு நூல். படங்களுடன் கூடிய இந் நூல், வேதாந்தத்திற்கே தென்னிந்தியாவிலிருந்து புனர் ஜன்மம் அளித்த ஆதி சங்கரரின் அருமை பெருமைகளைத் தமிழர் அனைவருக்கும் ஒருவாறு அறிவிக்கும் என்று நம்புகிறோம்.

"திராவிட சம்பத்து" என்ற பகுதியில் (ஆ. வி. யில்) 'திராவிட சம்பத்து" என்றால் அப்படி ஒரு இனம் இருந்ததாகவோ, இருப்பதாக நாம் ஒப்புக்கொள்ளவில்லை. என்று குறிப்பிட்டு விட்டு, கடைசியாக 'உண்மையில் திராவிட சம்பத்து என்றால் திராவிட மொழி வழங்கும் பிரதேசத்திலே போற்றிப் பாதுகாக்கத் தக்க பெருஞ் செல்வம் என்று தான் பொருள்'" என்று முடிக்கிறது.





ஆனால் மேலே கண்ட புத்தக விமர்சனப் பகுதிப்படி பாரதியார் கருத்தென்று கூறி, வேறு எதற்கோ விமர்சனம் எழுதும் முறையில் பாரததேசம் முழுதும் ஆரிய தேசம் அதன் மொழி, கலை, நாகரிகம் யாவும் ஆரிய சம்பத்து என்று எழுதுவது எந்த நீதிக்குச் சரி. செல்லும், எதற்காக இத்தகைய வேண்டப்படாத விளக்கங்கள், தேவைப்படாத இடங்களிலே கூட. சிந்திக்க வேண்டுகிறோம். 'ஆரிய சம்பத்து—திராவிட சம்பத்து—இரண்டிற்கும் ஏன் இந்த பேதம்—வீண் விளக்கங்கள்.

'திராவிடம்' இல்லையென்று கூறுவோர், திராவிட மொழியால், தமிழால் வளர்ந்து, வாழ்ந்த டாக்டர் உ. வே. சாமிநாதய்யரைப் பார்க்கட்டும் என்று அடுத்த கட்டுரையில் கலைஞர் கருணாநிதி சொல்வதைக் கேட்கட்டும்.

தொடருங்கள் மேலே.



# ஐயர் அறிவிக்கிருர்!

சென்னைக் கடற்கரையிலே நின்று கொண்டிருக்கிருர் அந்த ஐயர். போவார் வருவாரெல்லாம் அவரைப் பார்த்துப் போகிருர்கள்.. பூணூல் அணிந்தவர் தான். போட்டிருக்கும் சட்டைக்குள்ளே நூல் மறைந்திருக்கிறது அவ்வளவுதான், கடற்கரைப்பக்கம் வருகிறவர்களைப் பார்த்து, அவர், "நாட்டினரே; நாட்டினரே ஒரு சேதி என்கிருர். அதோடு விடுவதில்லை அவர். "திராவிடம் என்ருெரு சொல் உண்டு; அது தித்திக்கும் தேன் மொழி கற்கண்டு" என்று பாடுகிருர். ஆச்சரியப் படுவீர்கள் நீங்கள்.

அய்யராவது திராவிடத்தை ஒத்துக் கொள்வதாவது என்று திடுக்கிடுவீர்கள். உண்மை நண்பர்களே உண்மை! அன்றைக்கு ஒரு நாள் நானும் என் நண்பர்களும் கடற்கரையில் அந்த அய்யரைச் சந்தித்தோம். மேலே சொன்ன பாடலை அவர் பாடினுர் 'திராவிடம்' 'திராவிடம்' என்று கூவினுர் திராவிடம் என்ருலே தீயை மிதித்ததுபோலத் துள்ளும் "ஏனேதானே" கட்சிக்காரர் ஒருவரும் அந்த அய்யரின் முழக்கத்தைக் கேட்டு விட்டுத் தலைகுனிந்துபோய் விட்டார்.

நீங்கள் உடனே சென்னைக் கடற்கரைக்குச் செல்லுங்கள். பிரசிடென்சி கல்லூரி வாயிலிலே நின்று





கொண்டிருக்கிருர் அந்த அய்யர். நான் சொன்னது உண்மையா அல்லவா என்பது தெரியும். தெரிந்த பிறகு அந்த ஏனேதானேக்கள்...எங்கேயோ கிடந்ததுகள்—இடந்தேடிகள் ஆகியவர்களிடம் சொல்லுங்கள் போய்ப்பார்க்கும்படி—அதோடு கீழுள்ளவற்றையும் கவனமாய்ப் படியுங்கள்.

சென்னைக் கடற்கரையில் பிரசிடென்சி கல்லூரி வாயிலில் இருக்கும் டாக்டர் உ, வே. சாமிநாதய்யர் சிலையின் கீழே எழுதப்பட்டிருக்கும் வாசகங்கள்.

"மகா மகோபாத்யாய திராவிட வித்ய பூஷண டாக்டர் சாமிநாத அய்யர்" என்பவை!



ஸ்ரீமகள் அச்சகம், சென்னை-1

